
CHANDAMAMA



# அம்புலிமாமா

## செப்டம்பர் 1997



## பொருளடக்கம்






**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**

# அம்புலிமாமா




நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி



## ஒற்றுமை நீங்கின் அனைவர்க்கும் தாழ்வே

நம் நாட்டில் வியாபாரம் செய்ய அடி எடுத்து வைத்த கிழக்கிந்திய கம்பெனி பேராசை கொண்டு நம் நாட்டின் பகுதிகளைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் வசப்படுத்திக் கொள்ளலாயிற்று. இதற்காக அது எந்த வழியையும் கடை பிடித்தது. நியாயம், நேர்மை, நம் நாட்டுப் பழம் வழக்கங்களையெல்லாம் பற்றி ஆங்கிலேயர்கள் சற்றும் கவலைப்படவில்லை.

அப்போது சிற்றரசர்கள் ஒற்றுமை இல்லாமல் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தது ஆங்கிலேயர்களுக்கு அனுகூலமாகி விட்டது. சிற்றரசர்கள் ஒருவர்க் கொருவர் மோதிக் கொண்ட போது ஆங்கிலேயர்கள் ஒரு அரசனுக்கு உதவுவது போல உதவி மற்ற அரசனைத் தோல்வியுறச் செய்து அப் பகுதிகளைத் தம் வசப் படுத்திக் கொண்டனர். பிறகு மற்ற அரசனையும் தமக்கு அடி பணிய வைத்து அவனுடைய நாட்டையும் கைப் பற்றி வந்தார்கள்.



இவ்வாறு தமக்குள் ஒற்றுமை இல்லாததால் நம் சிற்றரசர்கள் நாட்டை இழந்து ஆங்கிலேயர்களிடம் கொடுத்து விட்டார்கள். ஆனால் இந்திய மக்கள் ஆங்கில ஆட்சியை ஏற்காமல் போராட்டங்களைத் தொடர்ந்து நடத்தி முடிவில் ஆங்கிலேயரின் ஆட்சிக்கு முடிவு கட்டி சுதந்திரத்தை பெற்றே விட்டார்கள்.

மதிமுகம்: 101 செப்டம்பர் 1997 புன்னகை: 3

தனிப்பிரதி: ரூ.6.00 வருட சந்தா: ரூ.72.00



செய்திகளும் தகவல்களும்

# நம் புதிய குடியரசுத் தலைவர்

மிக ஏழ்மையிலுள்ள குடும்பத்தில் பிறந்த ஒருவர் நாட்டின் மிக உயரிய பதவியை அடைவது ஒரு அரிய நிகழ்ச்சியே. இதற்கு உழைப்பும் விடா முயற்சியும் தேவை. இப்படி உயர் பதவியை அடைந்தவர்களில் அமெரிக்க ஜனாதிபதி ஆப்ரஹாம் லிங்கனைக் கூறலாம். இவரைப் போலவே அண்மையில் ஜூலை 12ந் தேதி நடந்த தேர்தலில் நம் நாட்டின் 11வது குடியரசுத் தலைவராகப் பெரும்பான்மை வாக்குகள் பெற்று தேர்ந்தெடுக்கப்பட்டவர் திரு. கே.ஆர். நாராயணன். எங்கோ ஒரு கிராமத்தில் ஏழைக் குடும்பத்தில் பிறந்து கஷ்டப்பட்டுப் படித்து நாட்டின் மிக உயர்ந்த பதவியை இவர் அடைந்துள்ளார்.



கோசெரில் ராமன் நாராயணன் கேரள மாநிலத்தில் கோட்டையம் அருகே உழவூர் என்ற கிராமத்தில் 1920ல் நவம்பர் 27 அன்று பிறந்தார். நாராயணனின் தந்தை ஆயுர்வேத வைத்தியர். நாராயணன் தம் ஏழாவது வயதில் அரசினர் பள்ளியில் முதலாவது வகுப்பில் சேர்ந்தார். அவர் உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் போது பள்ளிக் கட்டணம் கட்டவே மிகவும் சிரமப்பட்டார். ஆயினும் படிப்பில் கவனம் செலுத்தி உயர் மதிப்பெண்கள் பெற்றார்.

திருவனந்தபுரம் பல்கலைக் கழகக் கல்லூரியில் 1942ல் ஆங்கில இலக்கியத்தில் முதல் வகுப்பில் மிக அதிக மதிப்பெண்கள் பெற்ற முதலிட மாணவராய் பட்டம் பெற்றார். சிறிது காலத்தில் ஒரு டுடோரியல் கல்வி நிறுவனத்தில் ஆசிரியராகப் பணிபுரிந்து விட்டு டில்லிக்குப் போய் அரசாங்க அயல் நாட்டுத் துறையில் ஒரு உதவியாளராகப் பணிபுரிந்தார். பின்னர் அந்த வேலையை விட்டு விட்டு குறைந்த சம்பளத்தில் ஒரு பத்திரிகையில் சேர்ந்தார். சிறிது காலம் சென்னை 'ஹிந்து'விலும் பம்பாய் 'டைம் ஆஃப் இண்டியா' விலும் உதவி ஆசிரியராக இருந்தார். 'கௌடில்யா' என்ற புனைப் பெயரில் கட்டுரைகளையும் எழுதி வந்தார்.

இவர் 1944 ஏப்ரல் 10ந் தேதி மகாத்மா காந்தியை பேட்டிக் கண்டார். அன்று மௌன விரத நாள். அதனால் நாராயணன் கேட்ட கேள்விகளுக்கு அவர் உபயோகப் படுத்தப்பட்ட காகித உறையின் மீது பதிலை எழுதித் தந்தார். அந்த உறையை இவர் இன்னமும் பத்திரமாக வைத்திருக்கிறார்.

இவர் இங்கிலாந்திற்கு 1945ல் சென்று லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸில் சேர்ந்து பேராசிரியர் ஹெரால்ட் ஜெ. லாஸ்கியின் அன்பிற்குப் பாத்திரமானார். 1948ல் இவர் இந்தியாவுக்குத் திரும்பி வந்தார். ஜவாஹர்லால் நேரு அயல் நாட்டு இலாகாவில் ஒரு வேலையைப் போட்டுக் கொடுத்து பர்மாவில் (மைன்மார்) இந்திய தூதரகத்தில் பணிபுரியும்படிச் சொல்லி அனுப்பினார். அதன் பின் ஜப்பான், பிரிட்டன், வியட்நாம் ஆகிய நாடுகளில் இந்திய தூதரகங்களில் பணிபுரிந்தார். அதன் பின் தாய்லாந்து, துருக்கி, சீனா ஆகிய நாடுகளில் இந்தியாவின் தூதராகப் பணிபுரிந்தார்.

இதன் பின் தன் வேலையை ராஜினாமா செய்து விட்டு 1978ல் டில்லியின் ஜவாஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தின் துணை வேந்தரானார். 1980ல் இந்திரா காந்தி இவரை அமெரிக்காவிற்கு இந்திய தூதராக அனுப்பினார். ராஜீவ் காந்தி பிரதம மந்திரி ஆனதும் நாராயணன் அரசியலுக்கு வர வேண்டுமென விரும்பினார். கேரள மாநிலத்தில் ஒத்தப் பாலத்திலிருந்து நாடாளுமன்றத்திற்கு காங்கிரஸ் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். திட்டம், அயல் நாட்டுத் துறைகளில் துணை மந்திரியாகவும் பின்னர் விஞ்ஞானம், புள்ளி விவரம் துணை அமைச்சராகவும் பதவி வகித்தார். ஒத்தப்பாலத்திலிருந்து மீண்டும் இரு முறை நாடாளுமன்றத்திற்குப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன் பின் நம் நாட்டின் துணைக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இப்போது இவர் உயர் பதவியில் இருந்தாலும் தம் இளமைப் பருவ நாட்களை மறந்துவிடவில்லை. மக்கள் தம்மிடமிருந்து எதிர்பார்ப்பவற்றைத் தம்மால் இயன்றவரை நிறைவேற்றுவதாக இவர் உறுதி கூறியுள்ளார்.



# மன்னன் புரிந்த தவறு

மந்தரபுரியின் மன்னன் மந்தர சேனன் முரட்டுப் பிடிவாதக் காரன். நாட்டில் முதுமையடைந்த அமைச்சர் இருந்த போதிலும் மன்னன் அவரது யோசனையைக் கேட்காமல் தன் போக்கில் ஆட்சியை நடத்தி வந் தான். அவன் யாரிடமும் எதற்கும் யோசனை கேட்பதும் இல்லை.

ஒரு நாள் மன்னன் ஒற்றர்கள் வாயி லாக மக்களில் பெரும்பாலோர் சுக மாயும் திருப்தியாகவும் இல்லை என அறிந்தான். அதனால் அது உண்மை தானா என்று அறிய அன்றிரவே மாறு வேடத்தில் நகருக்குள் சென்றான். அவன் ஒரு குறுகலான சந்தில் சென்ற போது ஒரு ஓட்டு வீட்டினுள் கணவ னும் மனைவியும் பேசிக் கொண்டி ருப்பதை மறைந்திருந்து கேட்கலா னான்.

மனைவி தன் கணவனிடம் ''நானும் மூன்று மாதங்களாக கவ னித்து வருகிறேன். நீங்கள் எப்போ தும் எது பற்றியோ கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்களே என்ன விஷ யம்?'' என்று கேட்டாள். கணவனும் ''என்ன சொல்வது. நான் நினைப்பது எதுவும் நடக்கிறதே இல்லை இப் போது உள்ள தொல்லைகளைப் போக்கிக் கொள்ள வேண்டுமென் றால் நான் நினைக்கும் அளவிற்கு எனக்குப் பணம் கிடைக்க வேண்டும். அதுதான் கிடைக்காமல் இருக்கி றதே.'' என்றான். இதைக் கேட்ட மன் னன் ''ஓ! இதனால்தான் மக்கள் சுக மாக இல்லையா? இதற்கு வழி செய்ய லாம்'' என்று எண்ணிக் கொண்டு அரண்மனைக்குத் திரும்பி வந்தான்.

அன்றிரவு படுத்துக் கொண்டே மன்னன் மறுநாள் சிலரிடம் அவர்கள் என்ன நினைத்தார்கள் என்பதை அறிந்து அவர்கள் நினைத்தபடி நடக் கும்படி செய்து விடுவது என்று தீர் மானித்துக் கொண்டான்.

மறுநாள் மந்தரசேனன் குளித்து

—சிவனார் செல்வன்—

விட்டு வந்த போது ஒரு பணியாள் வெள்ளி டம்ளரில் பால் கொண்டு வந்து அவனிடம் நீட்டினான். பாலைக் கொடுக்கு முன் அந்தப் பணியாள் அதை சரியாக கவனிக்க வில்லை. அது திரிந்து போயிருந்தது. அப்போது தான் அதை அப்பணியாள் பார்த்துப் பதறிப் போனான்.



அப்போது மந்தரசேனன் அவனைப் பார்த்து ''நீ இப்போது உன் மனதில் என்ன நினைக்கிறாய்? உள்ளதைச் சொல்'' என்று கேட்டான். அப்பணியாளும் ''இந்தச் சூடான பாலை நீங்கள் என் முகத்தில் விட்டு அடிப்பீர்களோ என்று நினைக்கிறேன்'' என்றான். அவ்வளவுதான்! மன்னன் அந்தப் பணியாள் நினைத்தபடியே செய்து விட்டான். பணியாள் வலி பொறுக்க முடியாமல் ஓடினான்.

அன்று அரச சபையில் ஒருவன் ஒருசிறு திருட்டைச்செய்த குற்றத்திற்காக மன்னன் முன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான். அவன் செய்த குற்றம் நிரூபிக்கப்பட்டது. அப்போது மன்னன் அத்திருடனிடம் ''இப்போது உன்னை நான் என்ன செய்வேனென்று நீ நினைக்கிறாய்?'' என்று கேட்டான். அத்திருடனும் ''எனக்கு சவுக்கடி கொடுப்பீர்களோ என பயப்படுகிறேன்'' என்றான். மன்னனும் அவனுக்கு அவன் நினைத்தபடியே தண்டனையை அளித்தான்.

அன்றிரவு ராணி மன்னனிடம் ''நான் ஒரு முறை என் தாய் தந்தையரைப் பார்க்க விரும்புகிறேன். போவதற்கு அனுமதி கொடுக்கிறீர்களா?'' என்று கேட்டாள். மன்னனும் ''என்னிடமிருந்து என்ன பதில் கிடைக்குமென நீ நினைக்கிறாய்?'' என்று கேட்டான். ராணியும் ''என் தாய்தந்தையர் இரண்டு மாதங்களுக்கு முன்புதான் இங்கு வந்து போனார்கள். அதனால் இப்போது நான் போக வேண்டாமென்று கூறுவீர்களோ என்று நினைக்கிறேன்'' என்றாள்.

மன்னனும் ''அது சரிதான்'' எனவே ராணி பெருமூச்சு விட்டவாறே தன் அறைக்குள் சென்று விட்டாள். மந்தரசேனன் அதுவரை நடந்த மூன்று நிகழ்ச்சிகளைப் பற்றி யோசித்துப் பார்த்தான். மூவரும் என்ன நினைத்தார்களோ அவற்றைச் செய்தும் அவர்கள் மகிழ்ச்சி அடையவில்லையே எனக் கண்ட மன்னன் மக்களின் துயரத்திற்கு வேறு ஏதோ காரணம் இருக்க வேண்டுமென எண்ணினான்.



அன்றிரவு மன்னன் மீண்டும் மாறு வேடத்தில் நகருக்குள் சென்றான். ஒரு மாளிகையின் முன் புல்வெளியில் நாற்காலிகளைப் போட்டு அவற்றில் அமர்ந்து கணவனும் மனைவியும் பேசிக் கொண்டிருப்பதை மன்னன் கண்டு ஒரு மரத்தின் பின்னால் மறைந்து நின்று அவர்கள் என்ன பேசு கிறார்களென்று கேட்கலானான்.

மனைவி கணவனிடம் ''நீங்கள் முன்போல உற்சாகமாக இல்லையே என்ன கவலை உங்களுக்கு?'' என்று கேட்டாள். கணவனும் ''நான் நினைப்பது நடப்பதில்லை. நினைக் காதது நடக்கிறது. நான் எண்ணிய படியே எல்லாம் நடக்கும் என்று நினைத்திருந்தேன். ஆனால் அப்படி நடக்காமல் நேர்மாறாக நடக்கிறது. அதுதான் கவலையாக இருக்கிறது'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் ஏதோ புதிதாக தெரிந்து கொண்டது போல இனி ஒருவன் நினைத்ததற்கு மாறாக நினைக்காததை நடக்கும்படி செய்து விட்டால் மக்கள் துயரம் போய் விடு மென நினைத்து அரண்மனைக்குத் திரும்பி வந்தான்.

மறுநாள் தர்பாருக்குக் கிளம்பும் போது பணியாள் மன்னனிடம் போர்த் திக் கொள்ளப் பட்டு அங்கவஸ்தி ரத்தை எடுத்து கொடுத்தான். அது ஒரு ஓரத்தில் கொஞ்சம் கிழிந்திருந்தது. அதைப் பார்த்த பணியாள் ''மன்னி யுங்கள் அரசே! நான் இந்த கிழிசலை கவனிக்கவில்லை. வேறு அங்கவஸ் திரம் கொண்டு வருகிறேன்'' என் றான்.

மந்தரசேனனும் ''இப்போது உன்னை நான் என்ன செய்வேனென்று நீ நினைக்கிறாய்?'' என்று கேட்டான். அவனும் ''என்னை தண்டிப்பீர்கள், இந்தக் கிழிசல் அங்கவஸ்திரத்துடன் சபைக்குச் செல்ல மாட்டீர்கள்'' என் றான். மன்னனோ ''உன்னை தண்டிக் கப்போவதும் இல்லை. இதே கிழிசல் அங்கவஸ்திரத்துடனேயே சபைக்கும் செல்லப் போகிறேன்'' என்றான்.

சபைக்கு மன்னன் சென்று அமர்ந்து அன்றைய நடவடிக்கைகளில் ஈடு பட்டிருந்தபோது கிழ அமைச்சர் தூங்குவதை கவனித்து அவரை எழுப் பும்படி ஒரு பணியாளுக்கு சைகை செய்தான். மந்திரியும் தூக்கம் கலைந்து சரியாக உட்கார்ந்து கொண்டு ''மன்னிக்க வேண்டும் அரசே'' என்றார். அப்போது மன்னன் அவரிடம் ''இப்போது நான் என்ன

செய்வேனென நீங்கள் நினைக்கிறீர்கள்?'' என்று அவரிடம் கேட்டான். அமைச்சரும் ''இப்படிப்பட்ட தூங்கு மூஞ்சி அமைச்சரையா நான் இன்னமும் பதவியில் வைத்திருக்கிறேன் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பீர்கள்'' என்றார். மன்னனோ ''அதெல்லாம் இல்லை. உங்களைப் போன்றவர் எனக்கு அமைச்சராக இருப்பதால் பெருமை அடைகிறேன்'' என்றான்.

சபையோர் பலமாகச் சிரித்தனர். மன்னன் கேலி செய்வதாக எண்ணி அமைச்சர் வெட்கத்தால் தலை குனிந்து கொண்டார். அன்று மாலை மன்னன் அரண்மனைப் பூங்காவில் உலாவிக் கொண்டிருக்கையில் காற்று ஒரு முள்ளை செடியின் சிறு கிளையை அடித்துக் கொண்டு வந்து அவன் காலின் பக்கம் போட்டது. அதைக் கண்டு கிழத் தோட்டக்காவலாளி ஓடி வந்து அந்த முள்ளை எடுத்து தூர எறிந்து விட்டு ''மன்னியுங்கள் அரசே! இம்மாதிரி மறுபடியும் நடக்காமல் பார்த்துக் கொள்கிறேன்'' என்றான் நடுநடுங்கிக் கொண்டே.

அப்போது மன்னன் ''இப்படி நடந்ததற்கு நான் என்ன சொல்வேனென்று நீ நினைக்கிறாய்?'' என்று கேட்டான். கிழவனும் ''இந்தத் தோட்டத்தை கிழவனாகிய நான் சரியாக கவனித்துக் கொள்ளவில்லை என்று நினைத்து என்னை வேலையிலிருந்து நீக்கி விடாதீர்கள்'' என்று கெஞ்சினான்.

மன்னனோ ''முடியாது. உன்னை வேலையிலிருந்து நீக்கி விட்டு ஒரு இளைஞனைக் காவலாளியாக நிய



மிக்கப் போகிறேன்'' என்றான். கிழக் காவலாளி கண்ணீர் விட்டவாறே அங்கிருந்து சென்றான். மன்னன் அரண்மனைக்கு வந்ததும் ராணி அவனிடம்தான் தன் தாய் தந்தையரைக் காணப்போக மீண்டும் அனுமதியைக் கேட்டாள். அப்போது மன்னன் ''நீ என்னிடமிருந்து என்ன பதிலை எதிர்பார்க்கிறாய்?'' என்று கேட்டான்.

ராணியும் ''நான் அடிக்கடி கேட்டதால் இம்முறை நான் போவதற்கு நீங்கள் அனுமதி அளிக்க நினைப்பீர்கள் என்றே எதிர்பார்க்கிறேன்'' என்றாள். மன்னனோ ''இல்லை, உனக்கு அனுமதி அளிக்க மாட்டேன்'' என்றான். ராணி பெருமூச்சு விட்டவாறே தன் அறைக்குச் சென்றாள்.

ராணியின் வருத்தத்தைக் கண்டு

மன்னன் யோசிக்கலானான். ஒருவன் தான் நினைக்காதது நடந்தாலும் அதனால் அவன் ஏன் சந்தோஷப்படவில்லை என்று அவன் நினைத்துப் பார்த்தான். அதற்கு பதில் கிடைக்காததால் அன்றிரவு முழுவதும் அவன் தூங்கவில்லை.

தன் கணவன் தூங்காமலிருப்பதைக் கண்டு ராணி அவனது அறைக்கு வந்து ''தூங்கவில்லையா நீங்கள்? என்ன யோசனை செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள். மன்னனும் தான் மக்களின் துயரங்களுக்கு என்ன காரணம் என காண முயன்றேன். அப்போது சிலர் நாம் நினைத்தது நடக்காததால் கஷ்டப்படுவதாயும் வேறு சிலர் நினைத்தற்கு மாறாக நடப்பதால் கஷ்டப்படுவதும் தெரிந்தது. அவர்களுக்கு உதவ முயன்றும் அவர்கள் மகிழ்ச்சி அடையவில்லையே'' என்று அவளிடம் கூறினான். அவளிடம் ''மக்கள் நினைத்தது நடந்தா லும் நினைக்காதது நடந்தாலும் மகிழ்ச்சி அடையவில்லையே. எப்படித்தான் அவர்களது துயரங்களைப் போக்குவது என்றுதான் கவலைப்படுகிறேன்'' என்றான்.

ராணி மெதுவாகச் சிரித்து ''ஒருவர் நினைப்பது நடந்தாலும், நினைக்காதது நடந்தாலும் மகிழ்ச்சி அடையாமல் போகலாம். மன்னன் மக்களுக்குத் தந்தை போன்றவன். அவன் அவர்களது அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறைவிடம் ஆகியவற்றைக் கிடைக்கும்படி செய்து வேலையும் கொடுத்தால் அவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள். நீங்கள் இவற்றைச் செய்து கொடுத்தாலே அவர்களது துயரங்கள் நீங்கும்'' என்றாள்.

அப்போது இவ்வளவு நாட்களாக ஆட்சியில்தான் செய்து வந்த தவறு என்ன என்று அவனுக்குப் புரிந்தது. மறுநாள் காலை அவன் அமைச்சரையும் முக்கிய அதிகாரிகளையும் ஒன்று கூட்டி அவர்களுடன் கலந்து ஆலோசித்து மக்களுக்கு குறைந்தபட்சத் தேவைகளை அளிக்கத் திட்டங்கள் வகுத்தான்.

இதற்குப் பின் மக்கள் கஷ்டப்படுகிறார்கள் என்று ஒற்றர்கள் மன்னனிடம் கூறவில்லை. மன்னனும் அமைச்சரது யோசனைகளைக் கேட்டு மக்களின் மனக் குறைகளைப் போக்கலானான்.





# ராஜா ராஜா தான்

மங்களகிரி மன்னன் மங்களசேனன் நல்ல விதமாக ஆட்சி புரிந்து மக்களின் அபிமானத்தைப் பெற்றவன். மக்களின் சுக துக்கங்களில் பங்கு கொண்டு அவர்களது நன்மதிப்பைப் பெற்றவன். அதனால் மக்களும் ''ராஜா என்றால் இவர்தான் ராஜா, நம்மை எவ்வளவு அக்கரையுடன் கவனித்துப் பாதுகாக்கிறார்'' என்று புகழ்ந்து கூறி வந்தார்கள்.

ஒருமுறை மங்களசேனன் குளிக்கும்போது வழுக்கி விழுந்து விட்டான். அதனால் கால் சுளுக்கிக் கொண்டு நடக்க முடியாமல் போகவே சில நாட்களுக்கு ஆட்சிப் பொறுப்பை அவன்தன் முதலமைச்சரிடம் ஒப்படைத்தான்.

முதலமைச்சரும் தன் ஆட்சியின் போது மன்னனின் ஆட்சியை விட எல்லாம் சிறந்து விளங்க வேண்டுமென எண்ணினார். மக்களுக்கு எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார் பாதைகளைச் செப்பனிட்டார். குளங்களை வெட்டினார். சத்திரங்கள் கட்டினார். புதிய பள்ளிக்கூடங்களையும் திறந்தார். ஒவ்வொரு ஊரிலும் மருத்துவமனை இருக்கும்படி ஏற்பாடு செய்து மக்களுக்கு இலவசமாய் மருத்துவ உதவி கிடைக்கும்படிச் செய்தார். ஆனால் எல்லாமே மன்னரது ஆட்சியில் இருந்தது போலவே நன்றாக இருந்ததால். யாரும் அமைச்சரைப் புகழவில்லை. மந்திரியின் மனமோ ''நான் யோசனைகள் கூறித் தானே மன்னர் ஆட்சி புரிந்தார். ஆனால் மக்கள் என்னைப் புகழாமல் அவரைப் புகழ்வது வேடிக்கையாக உள்ளது'' என்று எண்ணலானார்.

ஒருநாள் தலைநகரில் ஒரு குடிசைப் பகுதி தீப்பற்றி எரிந்துவிட்டது. அது கேட்டு அமைச்சர் சில அதிகாரிகள் புடை சூழ அப்பகுதிக்குச் சென்று ''உங்களுக்கு இதே இடத்தில் வீடுகள் கட்டிக் கொடுக்கப்படும். உணவுப்

—எஸ். சோபினி—

பொட்டலங்கள் கொடுக்கப்படும்'' என்று கூறினார். அதைக் கேட்டு அக் குடிசைவாழ் மக்கள் திருப்தி அடைய வில்லை. அவர்கள் யாரையோ எதிர் பார்ப்பது போல அங்குமிங்கும் பார்த் தார்கள்.

அமைச்சருக்கு மக்கள் யாரை எதிர் பார்க்கிறார்கள் எனத் தெரியவில்லை. தான் அவர்களுக்குப் பண உதவி அளிப்பதாகக் கூறி எரிந்து போன அவர்களது வீடுகளுக்கு பதிலாக அதே இடத்தில் புதிய வீடுகள் கட்டிக் கொடுப்பதாயும் சொல்லியும் ஏன் அவர்கள் திருப்தி அடையவில்லை?

அப்போது மன்னனே தன் தேரில் அமர்ந்து அங்கு வந்தான். அவனைக் கண்டதும் ''மகாராஜா வந்து விட் டார். இனி நமக்குக்கவலை இல்லை'' என்று கூறியவாறே அமைச்சரையும் அதிகாரிகளையும் அப்படியே விட்டு விட்டு ஓடிப் போய் மன்னனைச் சூழ்ந்து நின்றார்கள். மன்னனும் அவர் கள் ஒவ்வொருவரையும் தனித் தனி யாகக் கூப்பிட்டு விசாரித்து ஆறுதல் கூறி ''கவலைப்படாதீர்கள். நான் இருக்கிறேனல்லவா? உங்களுக்கு ஏற் பட்ட நஷ்டத்தை ஈடு செய்து மறுபடி யும் சுகமாக வாழும்படிச் செய்கி றேன்'' என்றான்.

குடிசைவாழ் மக்களும் ''ராஜா என் றால் இவர்தான் ராஜா! எப்படி அன்பு டன் பேசி ஆறுதல் கூறினார்! இதற்கு முன் அமைச்சரும் அதிகாரிகளும்தான் வந்தார்களே. இப்படியெல்லாம் நம் மிடம் விசாரித்தார்களா? இல்லையே இதுதான் ராஜாவுக்கும் மற்றவர்களுக் கும் உள்ள வித்தியாசம்'' என்று அமைச்சருக்கும் அதிகாரிகளுக்கும் கேட்கும்படி உரக்கக் கூறினார்கள்.

அப்போதுதான் அமைச்சருக்குத் தனக்கும் மன்னனுக்குமுள்ள வித்தி யாசம் தெரிந்தது. திட்டங்கள் வகுத் தும் அறிவுரைகளும் யோசனைகளும் கூறினாலும் அவற்றை ஏற்று நடத்தும் விதத்தில்தான் உள்ளது என்பது அவ ருக்குப் புரிந்தது. அதிகாரிகள் மக்க ளுக்கு ஆணையிடுவது போலக்கூறுவ தால் அவர்களை மக்கள் மதிப்ப தில்லை. ஆனால் மன்னன் அன்புடன் கனிவாகப் பேசுவதால் மக்கள் அவ னைப் போற்றி வருகிறார்கள் என் பதை அவர் அப்போது தெரிந்து கொண்டார். அவரது மனமும் ''ஆம். ராஜா ராஜாதான்'' என்று கூறியது.





# மாமன்னர் அசோகர்

## 8

(தந்தை பிந்துசாரரின் கட்டளைப்படி அசோகன் அவந்தியின் தலைநகரான உஜ்ஜயினிக்குக் கிளம்பினான். அன்று மாலை அவன் விதிஷா பள்ளத்தாக்கில் முகாம் போட்டான். விடியற்காலையில் இயற்கையின் அழகை ரசித்தவாறே அவன் செல்கையில் கிடுகிடு பள்ளம். ஒன்றில் விழுவதற்கு இருந்தான். அப்போது சாக்கியர் தலைவனின் புதல்வி விதிஷா அவனைக் காப்பாற்றினாள். அன்றிரவு அசோகனைக் கொல்ல வந்த இரு பெண்கள் பிடிபட்டனர். அதன் பிறகு–)

பிடிபட்ட இரு நடன மாதுகளையும் அவர்களுக்குத் துணையாக வந்த ஆடவர்களையும் யசன் சித்திரவதை செய்தான். அப்பெண்களிடம் ''நீங்கள் இளவரசரைக் கொல்ல வந்தீர்கள். இதற்கு உங்களுக்குக் கிடைக்கப் போவது மரண தண்டனை. எனவே இறப்பதற்கு முன் உண்மையைச் சொல்லுங்கள். இல்லாவிட்டால் இந்தப் பாவத்திற்கு நரகலோகத்திற்குத்தான் போவீர்கள்'' என்று பயமுறுத்தினான்.

அப்பெண்கள் பயந்து விட்டார்கள். அவர்களில் ஒருத்தி ''ஐயா! எங்கள் மீது இரக்கம் கொள்ளுங்கள். எங்களால் நீங்கள் படுத்தும் சித்திரவதையைச் சகிக்க முடியவில்லை. எங்களை இப்படி வதைத்துக் கொல்வதால் உங்களுக்கு ஒரு பயனும் இல்லை. எங்களை உயிரோடு விட்டுவிட்டால் உங்களுக்கு பிரயோஜனம் இருக்கும். அப்படி செய்தால் இப்போதே உண்

மையைக் கூறிவிடுகிறோம்'' என்று நடுநடுங்கிக் கொண்டே கூறினாள்.

யசனோ ''முதலில் உண்மையைக் கூறு. அதன்பிறகு உங்களை உயிரோடு விட்டு வைப்பது பற்றி யோசிக்க லாம்'' என்றான்.

''நாங்கள் பாடலிபுத்திரத்தி லிருந்து இளவரசரையும் அவரது படைகளையும் பின் தொடர்ந்து வந்தோம். நாங்கள் நடன மாதுகள். எங்களுக்கு யார் பணம் கொடுக்கிறார்களோ அவர்கள் செய்யச் சொன்னதைச் செய்வோம். நாங்கள் இளவரசரின் விரோதிகளல்ல. எங்களை அனுப்பியவர்கள் தாம் அவரது எதிரிகள்'' என்றாள் அந்த நடன மாது.

யசனும் ''அப்படியா? யார் உங்களை அனுப்பியவன்? சொல்'' என்று மிரட்டவே அவளும் ''எங்களுக்கு உயிர்ப் பிச்சை அளிப்பதாக வாக்களியுங்கள், பிறகு கூறுகிறோம்'' என்றாள். யசனோ ''நிபந்தனையெல்லாம் விதிக்காதே. அவன் யாரென்று கூறு. இல்லாவிட்டால் உங்களைக் கொன்று விடுவேன்'' என்று பயமுறுத்தினான்.

அந்த நடனமாதும் ''எங்களுக்குப் பணம் கொடுத்து இளவரசரைக் கொல்லச் சொன்னவர் வேறு யாருமில்லை. மகதத்தின் வருங்கால மன்னரும் பிந்துசாரரின் மூத்த மகனுமான சுசிம்மர்தான்'' என்றாள். ''இது உண்மையா?'' என்று கேட்டவாறே அசோகன் அங்கு வந்தான்.

அவளும் ''முற்றிலும் உண்மை. அவர் எங்களை அரண்மனைக்கு வரச் சொல்லி ஆயிரம் பொற்காசுகளும் ஆளுக்கொரு வைர மோதிரமும் கொடுத்தார். அவர் கூறிய வேலை



யைச் செய்து முடித்த பின் மேலும் பணமும் பரிசுகளும் கொடுப்பதாகக் கூறினார்.'' என்று கூறி தன்னிடமிருந்த வைர மோதிரத்தைக் காட்டி மற்றவளிடமும் அவள் பெற்ற மோதிரத்தையும் காட்டச் சொன்னாள்.

அவற்றைப் பார்த்த அசோகனும் யசனும் அவர்கள் கூறுவது உண்மையே என்று நம்பினார்கள். அவர்களை விசாரித்து முடித்த பின் அசோகன் கை தட்டித் தன் வீரர்களை அழைத்தான். கட்டுமஸ்தான உடலுள்ள மூன்று வீரர்கள் வந்து அசோகனின் முன் நின்றார்கள். அவர்களிடம் அசோகன் ''இவர்களை அழைத்துக் கொண்டு போய் அனுப்ப வேண்டிய இடத்திற்கு அனுப்பி விடுங்கள்'' என்று கட்டளை இட்டான்.

அந்த நடன மாதுகளும் ''எங்களை

TL-F-3



எங்கே அனுப்பப் போகிறீர்கள் பிர புவே!'' என்று கேட்டார்கள். அசோக னும் ''நீங்கள் என்னை எங்கே அனுப்ப நினைத்தீர்களோ அங்கு தான்'' என்றான். அது கேட்டு அவர்கள் அலறி ''ஐயா! வேண்டாம். அப்படிச்செய்யாதீர்கள்'' என்று கெஞ் சினார்கள். அப்போது ஒரு குரல் ''அழாதீர்கள். துரதிஷ்டம் பிடித்த பெண்களே! அழாமல் சாக்கிய முனி வரானபுத்தர்பிரானைப்பிரார்த்தனை செய்யுங்கள். அவரது அருளால் இள வரசர் காப்பாற்றப்பட்டது போல நீங்களும் காப்பாற்றப்படுவீர்கள்'' என்று ஒரு குரல் கணீரென்று கூறியது.

எல்லோரும் அந்தக் குரல் வந்த திக்கைப்பார்த்தார்கள். அங்கு விதிஷா தேவி புன்னகை புரிந்தவாறே நின்று கொண்டிருந்தாள். அவளைக் கண்ட யசன் ''தங்கையே! இவர்களுக்கு ஏன் வீணாசை காட்டுகிறாய்?'' என்று கேட்டான். விதிஷாவும் ''நானா ஆசை காட்டுகிறேன்? அவர்களை உயிருடன்விட்டு விடுவதாக நீதானே கூறினாய். இதற்குள் நீ சொன்னதை மறந்து விட்டாயா?'' என்று கேட் டாள்.

யசனும் ''என்ன உளறுகிறாய்? நான் எப்போது இவர்களை உயி ரோடு விட்டுவிடுவதாகக்கூறினேன். மேலும் இதையெல்லாம் தீர்மானிக்க நான் யார்?'' என்று சற்றுக் கோப மாகவே கேட்டான். விதிஷாவும் ''நீ இவர்களிடம் என்ன சொன்னாய்? உண்மையைச்சொல்லுங்கள், இல்லா விட்டால் உங்கள் உயிர் போய் விடும் என்று தானே. இவர்களோ உண்மை யைச்சொல்லி விட்டார்கள். அதனால் அவர்களது உயிர் போகக் கூடாது தானே. இது தானே நீ சொன்னதன் பொருள். இப்போது நீயே வரக்குத் தவறலாமா?'' என்று கேட்டாள்.

''சபாஷ்!'' என்று கூறிக்கைதட்டிய வாறே அசோகன் யசனைப் பார்த்து ''இப்படிப் பட்ட அறிவாளியான வளை தங்கையாக அடைந்துள்ள நீ மகா அதிர்ஷ்டசாலிதான்'' என்றான். அது கேட்டு யசன் எதுவும் பேச முடி யாது போனான். விதிஷாவும் மகிழ்ந்து போய் எதுவும் கூறாமல் நின் றாள். நடன மாதுகளோ தம் கண் களாலேயே அவளுக்குத் தம் நன்றி யைச் செலுத்தினார்கள்.

யசன் சற்று நேரத்திற்குப் பிறகு ''நீங்கள் உண்மையிலேயே இந்த சதி காரிகளை உயிருடன் விட்டுவிட வேண்டுமென்று விரும்புகிறீர்களா?''

என்று கேட்டான். அசோகனும் சிரித்த வாறே "விதிஷாதேவி அவ்வாறு விரும்பும் போது நாம் அப்படிச் செய் யாது இருக்க முடியுமா? ஆனால் நான் இப்படிச் செய்வதற்கு அவள் எனக்குத் தக்க விதத்தில் ஒரு பரிசை அளிக்க வேண்டும்" என்றான்.

விதிஷாவும் "அப்படியா? என் சக்திக்குள் அடங்கிய எதைப் பரிசாகக் கேட்டாலும் அதை உங்களுக்கு நான் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்" என்றாள். அசோகனும் "அது உன் சக்திக்கு மீறியது அல்ல. அதை இப் போது உன்னிடம் கூற மாட்டேன். ஆனால் நான் விரும்பும் பரிசு என்ன என்பதை உன் அண்ணனிடம் சொல்லி அனுப்புகிறேன்" என்றான்.



யசனுக்கு விஷயம் புரிந்து விட் டது. அவன் தன் தங்கையைப் பார்த்து இலேசாகச் சிரித்தான். அவள் நாணத் தால் தலை குனிந்தவாறே அங்கிருந்து சென்றாள். நடனமாதுகளையும் அவர் களோடு சிறைபிடிக்கப்பட்டவர் களையும் அங்கிருந்து அழைத்துக் கொண்டு போய் விட்டு விடும் படி அசோகன் கட்டளை இட்டான்.

யசன் சொன்னதை சாக்கியர் தலை வனும் அவனது மனைவியும் முதலில் நம்பவில்லை. சக்கரவர்த்தியின் மகன், இளவரசன் அசோகன் ஒரு சாதாரண குடும்பப் பெண் விதிஷாவை மணக்க விரும்புகிறானாம்! இது நடக்கக் கூடி யதா என்று அவர்கள் சந்தேகப்பட்டார் கள். யசனும் "இளவரசர் அசோகர் உயர் வம்சத்தில் பிறந்தவர். எல்லா அரசகுமாரர்களுக்கும் இருப்பது போலத் தாம் மன்னராகி நாட்டை ஆள வேண்டுமென்ற ஆசை அவருக்கு உள் ளது. அவர் நற்குணங்கள் கொண்ட வர். இவற்றையெல்லாம் அவரோடு இருப்பவர்களும் கூறுகிறார்கள். நானும் அவர்கள் எண்ணுவது போலவே நினைக்கிறேன். இப்போது அவர் அவந்தியில் ராஜப் பிரதிநிதியாக வந்திருக்கிறார். அவரை நம் விதிஷா மணந்து கொண்டால் ராணியாகி விடு வாள்" என்றான்.

அதைக் கேட்டுக் கொண்டே வந்த விதிஷா "அண்ணா! இதுதான் என்னை நீ புரிந்து கொண்ட விதமா? நான் ராணியாகி மகிழ்ச்சியுடன் வாழ் வேன் என்றா நீ நினைக்கிறாய்?" என்று கேட்டாள். யசனால் அவள் கேட்டதற்கு உடனே பதில் எதுவும் கூற முடியவில்லை. சற்று நேரத்திற் குப் பின் இலேசாகச் சிரித்தவாறே "எந்த அண்ணனாவது தன் தங்கை



ராணியாவதைப் பார்த்து சந்தோஷப் படாமல் இருப்பானா? இதில் என்ன தவறு உள்ளது? நீ இளவரசனின் விருப்பத்தை ஏன் ஏற்க மறுக்கிறாய்? இதுதான் எனக்குப் புரியவில்லை'' என்றான்.

அதுவரை எதுவும் பேசாமலிருந்த விதிஷாவின் தந்தை ''என் மகளின் வாழ்வு இளவரசரின் வாழ்வுடன் பிணைக்கப் பட்டிருப்பதாகவே தோன்றுகிறது. இல்லாவிட்டால் இவள் அவரை இரு முறை மரணத்தி லிருந்து காப்பாற்றி இருக்க முடி யுமா?'' என்றான்.

அவர்கள் பேசியதைக் கேட்டு விதி ஷாவின் கண்களில் கண்ணீர் நிறைந்து விட்டது. அவள் எதுவும் கூறாமல் வீட்டை விட்டு வெளியே வந்து வானத்தை நோக்கி ''புத்தர் பிரானே இதென்ன சோதனை? எனக்கு ஒரு நல்ல வழியைக் காட்டுங்கள். துறவற வாழ்க்கையை மேற்கொண்டு நீங்கள் காட்டிய வழியில் சென்று முக்தி அடையவே நான் விரும்புகிறேன். அதிகாரம், பதவி என்றெல்லாம் ஒரு நாளும் நான் ஆசைப்பட்டதில்லை. ஆனால் இப்போது ஏன் நான் தத்தளிக் கும் நிலை ஏற்பட்டுள்ளது?'' என்று வேண்டினாள்.

பிறகு அவள் உள்ளே போய் யசனி டம் ''எனக்கு எது நல்லது, எது கெட் டது என்றே தெரியவில்லை. தன் மகள் ஒரு அரசகுமாரனை மணக்கும் சந்தர்ப் பம் கிடைத்தால் அதை சந்தோஷத்து டன் வரவேற்காமல் எந்தத் தாய்தான் இருப்பாள்? எனவே இவ் விஷயத்தில் எனக்குச் சரியான வழி காட்டுபவர் என் குருநாதர் உபகுப்தர்தான்'' என் றாள்.

யசனும் ''சரி. அப்படியானால் அவ ரது யோசனையைக் கேட்டு அதன் படியே நட'' என்றான். அவளது தாய் தந்தையரும் அவள் அவ்வாறே செய்ய லாமென்று கூறிவிட்டார்கள். மறு நாள் அங்கு உபகுப்தர் வருவது தெரிந் தது. யசனும் தன் தங்கையின் அபிப் பிராயத்தை அசோகனிடம் கூறவே அவனும் உபகுப்தரின் முடிவு தெரி யும் வரை காத்திருப்பதாகக் கூறி னான்.

மறுநாள் காலை விதிஷா தன் தாய் தந்தையரையும் அண்ணன் யசனையும் கூட்டிக் கொண்டு உபகுப்தரைக் காணச் சென்றாள். அசோகனும் அவர் களைப் பின் பற்றிச் சென்றான். உப குப்தர் தங்கி இருந்த விஹாரத்தை அவர்கள் அடைந்ததும் விதிஷாவை

உள்ளே போக விட்டு மற்றவர்கள் வெளியே நின்றுவிட்டனர்.

உள்ளே சென்ற விதிஷா சற்று நேரத்திற்கெல்லாம் மலர்ந்த முகத்துடன் வெளியே வந்தாள். எல்லோரும் ஆவலுடன் அவள் என்ன சொல்லப் போகிறாள் என்று எதிர்பார்க்கலானார்கள். அப்போது விதிஷா "இளவரசர் மட்டும் ஏன் உங்களை விட்டு விலகி நிற்கிறார்? அவரை இங்கே அழைத்து வரலாமே" என்றாள்.

யசன் மகிழ்ச்சியுடன் அசோகன் இருந்த இடத்திற்கு ஓடினான். அவன் அடுத்த நிமிடமே அசோகனை அழைத்துக் கொண்டு விதிஷாவும் மற்றவர்களும் இருந்த இடத்திற்குச் சென்றான். விதிஷாவும் "இளவரசே! குருதேவர் தங்கள் விருப்பப்படி நான் நடந்து கொள்ளலாம் என அனுமதி அளித்துவிட்டார். ஆனால் எனது வேண்டுகோள் ஒன்று உள்ளது. புத்தர் பிரான் போதித்த அறநெறிகளை நான் கடைப் பிடித்து நடந்து வருவதற்கு நீங்கள் அனுமதிக்க வேண்டும்." என்று அமைதியுடன் சாந்தமாகக் கூறினாள்.

அசோகனும் "ஆகா. தாராளமாக நீ உன்னிஷ்டப்படி நடந்து கொள்ளலாம். எனக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை" என்றான். விதிஷாவும் "மிக்க நன்றி. குருதேவரும் இந்த விவாகத்தால் என் அறநெறிகளுக்கு எவ்வித இடைஞ்சலும் இராது என்று கூறினார். எனக்கு அவர் கூறுவதில் முழு நம்பிக்கை உண்டு. எனவே அவர் அனுமதி கொடுத்து விட்டதால் இனி நம் விவாகம் நடக்க எவ்விதத் தடையும் இல்லை" என்றாள். அது கேட்டு அவளது தாய் தந்தையர் அவளையும்



அசோகனையும் நீண்ட ஆயுள் பெற்று சுகமாக வாழ வாழ்த்தினர்.

அந்த விவாகத்திற்கு அனுமதி கோரி சாக்கியர் தலைவனும் அசோகனும் ஒரு கடிதம் எழுதி ஒரு தூதுவனிடம் கொடுத்து அதனை பிந்துசார மன்னனிடம் கொடுக்கும்படி அனுப்பினார்கள். ஆனால் அந்தக் கடிதம் பிந்துசாரனிடம் போய்ச் சேரவே இல்லை. சுசிம்மனின் நண்பன் ஒருவன் பணம் கொடுத்து அந்தக் கடிதத்தைத் தூதுவனிடமிருந்து வாங்கிக் கொண்டு விட்டான்.

சுசிம்மன் அந்தக் கடிதத்தைக் கிழித்தெறிந்தான். அதற்கு பதிலளிக்க பிந்துசாரன் எழுதியது போல ஒரு போலிக் கடிதத்தையும் தயாரித்துவிட்டான். அக்கடிதத்தில் அத்திருமணத்திற்குச் சம்மதிப்பதாக எழுதப்பட்டு பிந்துசா

ரன் என்ற கையொப்பமும் இடப் பட்டு அரசாங்க முத்திரையும் பதிக்கப் பட்டிருந்தது!

அசோகன் அவந்தியின் ராஜப் பிரதி நிதியாகப் பதவி ஏற்றபின் விதி ஷாவை மணந்து கொண்டான். இது நடந்த பிறகே சுசிம்மன் பிந்துசாரனி டம் ''தந்தையே! ஒற்றர்கள் எனக்கு அதிர்ச்சி தரும் செய்தியைக் கூறினார் கள். நம் அசோகன் சாக்கியர் தலைவ னின் மகள் விதிஷாவை மணந்து கொண்டுவிட்டானாம்!'' என்று கூறி னான்.

அதைக் கேட்ட பிந்துசாரன் ''என்ன சொல்கிறாய்? தந்தைக்கு தெரியா மலே மகன் மணம் செய்து கொண்டு விட்டானா? என் மகன் அரசகுமாரன். அவன் சாதாரணக் குடும்பத்து பெண் ஒருத்தியையா மணந்து கொண் டான்?'' என்று ஆத்திரத்துடன் கேட் டான். பிறகு அவன் ''அரசவம்சத்தில் வந்த பெண்ணுக்கு அவன் பிறக்க வில்லை. அதனால்தான் அவன் புத்தி இப்படிப் போய் விட்டது'' எனக் கூறி சலித்துக் கொண்டான். சுசிம்மன் அதைக் கேட்டு மகிழ்ந்தான்.

சில நாட்களுக்குப் பின் தட்சசீலத் தில் மீண்டும் கலவரங்கள் மூண்டன. பிந்துசாரன் சுசிம்மனை அழைத்து ''உன்னைத்தான் இப்போது தட்சசீலத் திற்கு அனுப்ப வேண்டும் அல்லது உன் சகோதரர்களில் யாரையாவது அனுப்ப வேண்டும். நீ என்ன சொல் கிறாய்?'' என்று கேட்டான்.

சுசிம்மனுக்குத் தன்னால் அதைச் செய்ய முடியாது என்பது தெரியும். ஆனால் இம்முறை முடியாது என்று கூறினால் தன்னைக் கையாலாகாத வன் என்று மன்னன் நினைத்து விடு வானோ என்று எண்ணி ''தந்தையே! தட்சசீலக் கலவரங்களை நான் அடக்கு கிறேன். அசோகன் சென்றமுறை கல கக்காரர்கள் எல்லோரையும் அழிக் காமல் வந்து விட்டானென்றே தெரி கிறது.'' என்று கூறினான்.

பிந்துசாரனும் ''இதில் கிரேக்கர் களின் கை இருப்பதாகத் தெரிகிறது. என் உடல் நிலை சரியில்லை என் பதை அவர்கள் அறிந்தே கலவரங் களைத் தூண்டி விட்டுக் கொண்டிருக் கிறார்கள். தாம் இழந்த இந்தியப் பகுதிகளை மீண்டும் கைப்பற்ற முயல்கிறார்கள் போலிருக்கிறது'' என்றான் கவலைப்பட்டவாறே.





# குரு தரிசனம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி நடந்து செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்தது ''மன்னனே! உன் போல ஒரே பிடிவாதமாக ஒரு வேலையில் இறங்கி முயல்பவர்கள் உலகில் மிகவும் அரிது. ஆனால் அப்படிப்பட்டவர்களில் ஒரு சிலர் உணர்ச்சி வசப்பட்டு தம்மை முன்பு துச்சமாகக் கருதியவர்களிடமே போய்ச்சேர்ந்து விடுகிறார்கள். இது மாவீரர்கள், சூரர்கள் விஷயத்தில் மட்டுமல்லாது கற்பனையில் மிதக்கும் கவிஞர்கள் விஷயத்திலும் பொருந்துவது. இதை விளக்க கலாதாசன் என்பவனின் கதையைக் கூறுகிறேன், கவனமாகக் கேள்'' என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

ஒரு சமயம் சிம்மகிரி சமஸ்தானத்

## வேதாளம் சொல்லும் கதை



தில் நரசிம்ம பட்டர் என்ற கவிஞர் இருந்தார். அவர் நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுணர்ந்தவர். அதனால் அவரது கவிதைகள் இலக்கண சுத்தமாய் பொருள் பதிந்து ஜன ரஞ்சகமாக அமைந்திருந்தன. மன்னர் அவரை மிகவும் மதித்துப் பல அதிகாரங்களை அவருக்கு அளித்திருந்தார். அரசரிடம் அவருக்கு இருக்கும் செல்வாக்கு கண்டு பலர் அவரைச் சந்தித்து தமக்கு அரசாங்கத்திடமிருந்து கிடைக்க வேண்டிய பலன்களை அவரது கட்டளைகளால் பெற்று வந்தார்கள். அதனால் எப்போதும் அவரது வீட்டில் கூட்டம் இருந்தது. அவரைக் கண்டு பேசுவது என்பது எளிதாக இருக்கவில்லை.

அதே நாட்டில் பச்சையூர் என்ற சிறு கிராமம் இருந்தது. அதில் கலாதாசன் என்ற இளைஞன் இருந்தான். அவன் இலக்கிய ஆர்வம் கொண்டவன் இளம் வயதிலேயே பல இலக்கிய நூல்களைப் படித்தான். அவற்றிலுள்ள நயங்களை மற்றவர்களுக்கு எடுத்துக் கூறி வந்தான். கவிதைகளும் புனைந்தான்.

அந்த ஊருக்கு வந்த ஒரு மாபெரும் கவிஞர் கலாதாசனிடம் "நீ இளைஞன். நல்ல கவிஞன். முன்னுக்கு வர வேண்டியவன். உனக்கு என் ஆசிகள். தொடர்ந்து கவிதை எழுதி வா" என்று கூறிவிட்டுச் சென்றார். அது முதல் கலாதாசன் கவிதைகளை நிறைய எழுதினான். அதைக் கேட்டவர்களெல்லாம் "கலாதாசா! உனக்கு சரஸ்வதி தேவியின் அருள் உள்ளது. நீ தலைநகருக்குப் போய் நரசிம்ம பட்டரைச் சந்தித்து உன் கவிதைகளை அவரிடம் காட்டிப் பாராட்டு பெற்றால் உன் மதிப்பு உயரும்" என்று கூறினார்கள்.

கலாதாசனும் அவர்கள் சொன்னதை ஏற்று நரசிம்ம பட்டரைக்காண சிம்மபுரிக்குச் சென்றான். அவன் அவரது வீட்டை அடைந்த போது அவ் வீட்டு வாசலில் நின்ற காவலாளி "உங்கள் வேலை என்னவென்று கூறினால் அவரிடம் அதைத் தெரிவிக்கிறேன். பிறகு உங்கள் அதிர்ஷ்டம் எப்படியோ அப்படித்தான் நடக்கும்" என்றான். கலாசாசனும் தன் கவிதைகளில் சிலவற்றை எழுதி "இவை பற்றி அவரது அபிப்பிராயம் தெரிய வேண்டும்" என்று கூறி அக்காவலாளியிடம் கொடுத்தான்.

காவலாளியும் "இதுதானா? ஐயா

வுக்கு இதெல்லாம் படிக்க நேரம் எங்கே இருக்கப் போகிறது? தினமும் ஆயிரம் பேர்கள் தங்கள் சொந்தப் பிரச்னைகளைக் கூறித் தமக்கு அனுகூலமான உத்திரவுகளைப் பெறவே இங்கு வருகிறார்கள். அது போல உங்களுக்கும் பணம், நிலம் சம்மந்தமாய் ஏதாவது உதவி வேண்டுமா? அதை அவர் செய்வார்'' என்றான். கலாதாசன் தனக்கு வேறு எதுவும் வேண்டியதில்லை என்று கூறவே காவலாளி உள்ளே போய் நரசிம்ம பட்டரிடம் கலாதாசனைப் பற்றிக் கூறினான். அவரைச் சுற்றி அப்போது பெரும் கூட்டம் இருந்தது. அதனால் அக்கவிதைகளை அவர்தம் சீடன் ஒருவனிடம் கொடுத்து ''இதைப் படித்துவிட்டு உன் அபிப்பிராயத்தை எழுது. நான் கையெழுத்தைப் போட்டுக் கொடுக்கிறேன்'' என்றார்.



சீடனும் அதைப் படித்துவிட்டு ''குருவே! இவை மிகவும் உயர்தரக் கவிதைகள். நீங்கள் இக்கவிஞரைப் பார்க்கிறீர்களா?'' எனக் கேட்டான். நரசிம்ம பட்டரும் ''வேண்டாம். இப்போதே கூட்டம் அதிகமாக உள்ளது. நீ அபிப்பிராயத்தை எழுது. நான் கையெழுத்துப் போடுகிறேன். அதைக் கொடுத்து விடலாம்'' என்றார். சீடனும் அவர் கூறியபடி செய்ய அவர் கையெழுத்தைப் போட்டு காவலாளியிடம் கொடுத்து அனுப்பினார்.

நரசிம்மபட்டர் தன்னை அழைக்கவில்லையே என எண்ணி ''இவரை உயர் தரக் கவிஞர் என்றும் இலக்கிய ரசிகர் என்றும் எண்ணி இவரைக் காண வந்தேன். என் கவிதைகளைப் படித்த பின் என்னை அழைத்து இலக்கிய சம்மந்தமாய்ப் பேசுவாரென எதிர்பார்த்தேன். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லையே'' என நினைத்து மனம் ஒடிந்து போய் கலாதாசன் தன் ஊருக்குத் திரும்பிச் சென்றான். இதற்குச் சில நாட்களுக்குப் பின் அரசாங்க அலுவலாய் சுற்றுப் பயணம் செய்தவாறே நரசிம்மபட்டர் பச்சையூருக்கு வந்து தங்கினார். அவர் அரசாங்க ஹோதாவில் பல வீரர்கள் புடை சூழ யானை மீது ஏறி வந்தார். அவரை ஊரார் வரவேற்று தங்கப் பல வசதிகளைச் செய்து கொடுத்தார்கள்.

ஊரார் அவரைக் கண்டு தம் கோரிக்கைகளை எல்லாம் அவர் முன் வைத்தார்கள். அவரும் அவற்றை எல்லாம் கவனித்து சாதகமான முடிவு எடுப்பதாக வாக்களித்தார். அவரைப்



பார்க்க வந்தவர்களை ஒழுங்குபடுத்தி ஒருவர் பின் ஒருவராக அனுப்புவதே சிரமமாக இருந்தது.

அவர் உணவு உண்ட பின் கிராம அதிகாரியிடம் ''இவ்வூரில் கவிஞர்கள். இலக்கிய ஆர்வம் கொண்டவர்கள் இருந்தால் என்னிடம் அனுப்புங்கள். அவர்களுக்கு ஏதாவது உதவி புரிகிறேன்'' என்றார். கிராம அதிகாரியும் ''இவ்வூரில் இலக்கிய ரசிகர்கள் பலர் இருக்கிறார்கள். கவிஞர்களும் நாலைந்து பேர்கள் உள்ளார்கள். அவர்கள் எல்லோருமே உங்களைக் கண்டு பேச ஆவலாக இருக்கிறார்கள் எல்லோரையும் இங்கே அனுப்பட்டுமா?'' என்று கேட்டார்.

நரசிம்ம பட்டரும் ''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் பெரிய கூட்டமே ஆகிவிடும் போலிருக்கிறதே. இந்த இடமும் போதாது. எனவே வெளியில் எங்காவது பொதுக் கூட்டம் போடலாம். அங்கு நான் இலக்கியப் பேருரை ஆற்றுகிறேன். அதில் கவிஞர்களும் இலக்கிய அன்பர்களும் என் முன்னால் முதல் வரிசையில் அமரட்டும்'' என்றார். கிராம அதிகாரியும் ஊர்க் கோவில் மண்டபத்தில் நரசிம்மபட்டரின் இலக்கியப் பேருரை நடைபெறும் என ஊரில் தண்டோராப் போட்டு அறிவித்தார்.

அவரது இலக்கிய உரையைக் கேட்க நல்ல கூட்டமும் கூடியது. அங்கு வந்தவர்கள் அனைவரும் அவரது பேச்சை ரசித்துக் கேட்டு கை தட்டித் தம் பாராட்டுதல்களைத் தெரிவித்தனர். கூட்டம் முடிந்ததும் இரு கவிஞர்களும் நாலைந்து இலக்கிய ரசிகர்களும் அவரைக் கண்டு பேசினார்கள். அவரும் அவர்களைப் பற்றி விசாரித்து அவர்கள் வேண்டிக் கொண்டபடி அவ்வூரில் ஒரு நூலகம் ஏற்படுத்திக் கொடுப்பதாக வாக்களித்தார். அவர்களது சொந்தப் பிரச்னைகளையும் கேட்டு அறிந்து அவர்களுக்குச் சாதகமான உத்திரவுகளையும் அவர் பிறப்பித்தார்.

அப்போதுதான் கிராம அதிகாரி அக் கூட்டத்தில் கலாதாசன் இல்லாததை கவனித்தார். அவன் நரசிம்மபட்டர் அவ்வூருக்கு வந்திருந்தும் அவரைச் சந்திக்க முயலவில்லை என்பதையும் தெரிந்து கொண்டார். அவர் கலாநாதனைப் பெரிதும் மதிப்பவர். அவனது கவிதைகளைப் படித்து ரசித்து மகிழ்பவர். எனவே கலாநாதன் உடனே வந்து நரசிம்மபட்டரைக்

கண்டால் பயனுள்ளதாக இருக்கும் என்று எண்ணி அவனை அழைத்து வரத் தம் ஆள் ஒருவனை அனுப் பினார்.

கலாநாதனோ தான் வருவதற்கு இல்லை என்ற பதிலை கிராம அதி காரிக்குத் தெரிவித்தான். அதைக் கேட்ட கிராம அதிகாரி வியப்படைந் தார்.

கொஞ்சகாலம் கழிந்தது. நரசிம்ம பட்டரின்மனம் ஏனோ அதிருப்தியை அடைந்தது. அவருக்கு உலக வாழ்க்கை பிடிக்காமல் போயிற்று. எனவே மன நிம்மதி பெற அவர் அர சாங்கப் பதவியைத் துறந்தார். தம் சொத்தைத் தம் மகன்களுக்கும் மகள் களுக்கும் பகிர்ந்து கொடுத்தார். தலை நகருக்கு அருகே உள்ள ஒரு காட்டில் ஒரு ஆசிரமத்தை அமைத்துக் கொண்டு தன் மனைவியுடன் அங்கு வாழ்ந்து வரலானார்.

இந்த விஷயம் கலாநாதனுக்குத் தெரிந்தது. அவன் தன் காவியங்களை எடுத்துக் கொண்டு நரசிம்ம பட்ட ரைக் காண அவரது ஆசிரமத்திற்குச் சென்றான். காட்டில் சிரமப்பட்டுப் பட்டுப் பயணம் செய்து அவன் நர சிம்ம பட்டரின் ஆசிரமத்தை அடைந் தான். நரசிம்ம பட்டரை அங்கு போன துமே அவனால் காண முடிந்தது. கூட்டம் எதுவும் இருக்க வில்லை.

கலாதாசன் போன போது நரசிம்ம பட்டர் தம் மனைவிக்கு மகாபாரதத் திலிருந்து கதை ஒன்றைக் கூறிக் கொண்டிருந்தார். அவரது மனைவி யும் கண்களை மூடிக் கொண்டு பக்தி சிரத்தையுடன் அதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் ''நீங்கள் பாரதக் கதைகளைக் கூற கேட்பது மனதை மிகவும் மகிழ்விக்கிறது.'' என்றாள்.

நரசிம்மபட்டரும் ''பாரதக் கதையை யார் கூறினாலும் நன்றாகத் தான் இருக்கும். மேலும் என் போன்ற





கவிஞர்கள் விவரித்துக் கூறினால் அது மேலும் சிறப்பாக இருக்கும் இது வரை பாரதக் கதையை எவ்வளவோ மொழிகளில் எவ்வளவோ கவிஞர்கள் எழுதி வைத்திருக்கிறார்கள், அவற்றை எல்லோரும் எப்படியெல்லாம் ரசிக்கிறார்கள்'' என்றார். அப்போது கலாநாதன் குறுக்கிட்டு ''ஆம். தங்களைப் போன்ற கவிஞர்களின் சேவை நாட்டிற்குத் தேவைதான். இப்போது உங்களுக்கு நிறைய நேரம் கிடைப்பதால் நிறையக் காவியங்களை எழுதி வருகிறீர்கள் என்றும் கேள்விப்படுகிறேன். அது சரிதானே'' என்று பணிவுடன் கேட்டான்.

நரசிம்ம பட்டரும் கலாநாதனை வரவேற்று அவனைப் பற்றிய விவரங்களை அறிந்து கொண்டார். பிறகு அவர் ''நீ புனைந்த கவிதைகள் சிலவற்றைக் கூறு. நான் கேட்கிறேன்'' என்றார். கலாநாதனும் தன் கவிதைகள் சிலவற்றைக் கூறினான் அவற்றை கவனமாகக் கேட்ட நரசிம்ம பட்டர் ''உனக்கு சரஸ்வதி தேவியின் அருள் நன்றாகவே கிடைத்துள்ளது. கவிதைகள் நன்றாகவும் உள்ளன. ஆனால் சில இலக்கணப் பிழைகள் அவற்றில் உள்ளன. அவற்றைத் திருத்திக்கொள். அப்போது நீ பெயரும் புகழும் பெறலாம்'' என்றார்.

அப்போது கலாதாசன் ''ஐயா! தாங்கள் எனது இக்கவிதைகளை இதற்கு முன் படித்திருக்கிறீர்கள். அப்போது இலக்கணப் பிழைகள் இருப்பதாகத் தாங்கள் கூறவில்லையே'' என்றான். நரசிம்ம பட்டரும் ''நான் இவற்றை இதற்கு முன் படித்திருக்கிறேனா? எப்போது?'' என்று கேட்கவே கலாதாசன் அவரைக் காணத் தலைநகருக்கு வந்த சம்பவம் பற்றிக் கூறினான்.

நரசிம்மபட்டரும் ''ஆமாம் அன்று இவற்றை என் சீடன் படித்து விட்டு அபிப்பிராயம் எழுதினான். நான் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தேன். அன்று நீ அபிப்பிராயத்தை மட்டும் கேட்டாய். என்னை நேரில் பார்த்திருந்தால் எவ்வளவோ பேசியிருக்கலாம்'' என்றார்.

அது கேட்டு கலாநாதன் சிரித்து ''என் கவிதையைத் தாங்கள் படித்து விட்டு என்னைப் பார்க்க விரும்புவீர்களென எதிர்பார்த்தேன். ஆனால் அன்று நீங்கள் என் கவிதைகள் நன்றாக உள்ளன எனப் பாராட்டியதை விட இன்று நீங்கள் என் கவிதைகளில் இலக்கணப் பிழைகள் உள்ளன என்று சுட்டிக் காட்டியது கண்டு பெரு

மகிழ்ச்சி அடைகிறேன். கொஞ்ச காலம் தங்கள் ஆசிரமத்தில் நான் ஒரு மாணவனாகத் தங்கித் தங்களுக்குப் பணிவிடை புரிய அனுமதிக்க வேண்டும்'' என்று வேண்டினான்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''கலாதாசனின் இந்த நடத்தை வேடிக்கையாக இல்லையா? தலைநகருக்குப் போய் நரசிம்ம பட்டரைக் காண முயன்ற கலாதாசன், அவர் அவனது ஊருக்கு வந்தபோது ஏன் பார்க்கப் போக வில்லை? அங்கு அவரைப் பார்க்க விரும்பாத கலாதாசன் காட்டிற்கு அவர் போன பின் அவரது ஆசிரமத்திற்குப் போய் ஏன் அவரைப் பார்த்தான்? அது மட்டுமா அவரது சீடனாக அங்கு இருக்க அனுமதியும் கேட்டானே. இது ஏன்? இக்கேள்விகளுக்கெல்லாம் சரியான விடைகள் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''கலாநாதன் தலைநகருக்குச் சென்றபோது நரசிம்ம பட்டர் தன் கவிதைகளைப் படித்து விட்டுத் தன்னைக் காண விரும்புவார் என எதிர்பார்த்தான். ஆனால் அவர் இலக்கியமல்லாது அரசாங்கத்து மற்ற பணிகளில் ஈடுபட்டிருந்ததால் இலக்கியத்தில் முழு கவனமும் செலுத்தவில்லை என்று கண்டு கொண்டான். அவர் பச்சையூருக்கு வந்த போதும் இலக்கியமல்லாது மற்ற அரசாங்க வேலைகளில் ஈடுபட்டிருந்ததால் அவரைக் காண கலாதாசன் செல்லவில்லை. ஏனெனில் இலக்கியம் பற்றி ஆழ்ந்து சிந்தித்துப் பேச அவருக்கு நேரம் இருக்கவில்லை. ஆனால் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பின் அவருக்கு இலக்கியம் பற்றி விவாதிக்க நிறைய நேரம் இருந்தது. அதனால் கலாதாசன் அவரைக் காண ஆசிரமத்திற்குப் போன போது கலாதாசனின் கவிதைகளைக் கேட்டு அவற்றில் இலக்கணப் பிழைகள் இருப்பதாகக் கூறினார். அம்மாதிரிப் பிழைகள் புரியாதிருக்கவே கலாதாசன் அவரது சீடனானான். இதில் விசித்திரம் எதுவும் இல்லை'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக்



# அவன் நின்ற காரணம்!

முத்தூரில் ஆண்டுதோறும் ஒரு ஓவியக் கண்காட்சி நடைபெற்று வந்தது. அதில் புகழ்பெற்று ஓவியர்களின் ஓவியங்களோடு மற்ற ஓவியர்களின் ஓவியங்களும் கூட வைக்கப்பட்டு வந்தன. ஒருமுறை நடந்த கண்காட்சியில் சந்திரன் என்ற இளம் ஓவியன் தான் வரைந்த முதல் ஓவியத்தை அக்கண்காட்சியில் வைத்து விட்டு அதுபற்றி கலா ரசிகர்கள் என்ன அபிப்பிராயம் கூறுகிறார்கள் என்பதை அறிய அவ்வூர் சத்திரத்தில் தங்கினான்.

அப்போது அதே சத்திரத்தில் தங்கி இருந்த மாதவன் சந்திரனிடம் பேசி அவனைப் பற்றித் தெரிந்து கொண்டு "ஓ! நீங்கள் தாம் அந்த ஓவியரா? இன்று காலை உங்கள் ஓவியத்தின் முன் ஒரு மணி நேரம் நின்று கொண்டிருந்தேன்" என்றான். அதைக்கேட்டு சந்திரன் புல்லரித்துப் போய் "ஆகா! நீங்கள் உண்மையான ரசிகரே. என் ஓவியத்தில் உங்களைக் கவர்ந்த சிறப்பு அம்சம் எதுவோ?" என்று கேட்டான்.

மாதவனும் "அப்படி ஒன்றும் இல்லை உங்கள் ஓவியத்திற்கு அருகே ராஜாவர்மாவின் ஓவியங்கள் வைக்கப்படிருந்தன. அவற்றைப்பார்க்க ரசிகர்களிண் பெரும் கூட்டம் இருந்த்து. நான் நகரக் கூட முடியாதபடி இருந்தேன். அதனால் அக்கூட்டம் போனபின் அவரது ஓவியங்களைப் பார்க்கவே உங்கள் ஓவியத்தின் முன் ஒரு மணி நேரம் காத்து நின்றேன்" என்றான்.

அதைக்கேட்ட சந்திரனின் முகத்தில் ஈயாடவில்லை.



கடற்கரையோரப் பயணங்கள் - 22

# ஒரிஸ்ஸா கடற்கரையில்

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கோபகுமார்**




உள் நாட்டில் சற்று தூரம் போனால் போமோ கோய் என்ற கிராமத்தை அடைகிறோம் இது புடைவைகளுக்குப் பெயர் பெற்றது. ஒரிஸ்ஸாவில் எங்குமே துணிகள் கைத்தறிகளில் நெய்யப்படுவதைக் காணலாம். போமோ கோய் புடவை அலாதியானது. இரு போமோ கோய் புடவைகள் ஒன்றுபோல இருப்பதில்லை.

இன்னும் சற்று தூரம் போனால் நம் நாட்டிலேயே மிகப் பெரிய ஏரியான சில்காவைக் காண்கிறோம். ஒரு சிறு கடைமுகம் சில்கா ஏரியை வங்காள விரிகுடாவுடன் சேர்க்கிறது இது சுமார் 1100 சதுர கிலோ மீ பரப்புள்ளது. கோடைகாலத்தில் இந்த ஏரியின் நீர் சற்று உப்பாக இருக்கும். ஆனால் மழைப் பருவத்தில் தயாநதியும் பார்க்கவி நதியும் தம் நீரை இதில் கொண்டு வந்து சேர்ப்பதால் இதன் நீர் குடி நீராகிவிடுகிறது.

இந்த ஏரியில் பசுமையான திட்டுகள் உள்ளன. ஒரு திட்டில் காளி ஜாய் ஆலயம் உள்ளது. இது அந்த ஏரியின் காவல் தெய்வம் திட்டுகளில் பல நீர்வளர் செடிகள் உள்ளன. குளிர்காலத்தில் கொக்குகளும், வாத்துகளும், நாரைகளும் மற்றும் பல ரகப் பறவைகளும் இத் திட்டுகளுக்கு வருகின்றன சில்கா ஏரியில் தென்படும் மீனவர் படகுகள் நீண்ட சதுரப் பாய்களைக் கொண்டுள்ளன.

சில்கா ஏரி



நாம் அடுத்து செல்லும் இடம் புரி எனப்படும் ஜகன்நாதபுரி. முன் காலத்தில் இது பலோரா என்று பெயர் பெற்றிருந்ததாம். இத்துறைமுகம் இந்தோனேசியாவுடன் நெருங்கிய வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்ததாம். பலோராவாக இருந்த புரி இன்று உல்லாசப் பயணிகள் வரும் இடமாக உள்ளது. ஒரிஸ்ஸா மாநிலத்திலேயே இந்தக் கடற்கரைதான் நீளமானது.

புரி ஹிந்துக்களின் முக்கியமான புனிதத் தலங்களில் ஒன்று. மற்றவை பத்திரிநாத், துவாரகா, ராமேஸ்வரம் என்பனவாம். புரியின் ஜகன்நாதரின் ஆலயம் ஊரின் நடுவே கம்பீரமாக உள்ளது. இது கி.பி. 12ம் நூற்றாண்டில் சோடகங்க மன்னனால் ஒரிஸ்ஸாவில் தன் தலைநகரை மாற்றிய தன் நினைவாக உருவாக்கப்பட்டது. இக் கோவிலின் ஜகன்நாதர்தான் கிருஷ்ணர். அவரது தங்கை சுபத்ராவும் அண்ணன் பலபத்திரரும் சரியாக முடிக்கப் படாத மர விக்கிரகங்களில் வழிபடப் படுகிறார்கள்.

புரியிலிருந்த நீல் வைரக் கல் விஷ்ணு விக்கிரகத்தைத் தானே எடுத்து வைத்துக் கொள்ள இந்திரத்யும்னன் என்ற மன்னன் சென்றான். அங்கு அவன் பார்த்த போது அதைக் காணவில்லை. தன் செய்கைக்காக வருந்தி அவன் தவம் செய்தான். அப்போது ஒரு அசரீரி வாக்கு கடவுளை ஒரு மரக் கட்டை வடிவில் காண்பாய் எனவே மன்னனும் கண் விழித்துப் பார்த்த போது ஒரு மரக்கட்டை கடலில் மிதந்து வந்தது. மன்னன் அதை எடுத்து வந்து தச்சர்களைக் கொண்டு பகவானின் உருவத்தைச் செதுக்க முயன்றான். ஆனால் எந்தத் தச்சனாலும் முடியவில்லை. அதைச் செதுக்கி முயன்றவனின் உளி உடைந்து கை முறிந்ததாம்.

ஒரு நாள் பகவானே கிழத் தச்சன் உருவில் அம் மன்னன் முன் வந்தார்.

**ரத யாத்திரை**



அந்தத் தச்சன் அந்த மரத்தில் 21 நாட்களில் விக்கிரகத்தைச் செதுக்கித் தருவதாயும், தான் செதுக்குவதை யாரும் பாக்கக் கூடாது என்றும் நிபந்தனை விதித்தான். மன்னன் அதற்குச் சம்மதித்தபோதிலும் ஆவலால் குறித்த காலத்திற்கு முன் அந்தத் தச்சன் என்ன செய்கிறான் என்று அவன் வேலை செய்யும் போது எட்டிப் பார்த்தான். அவ்வளவுதான், தச்சன் மாயமாய் மறைந்து விட்டான். அவன் உருவாக்கிய மூன்று மரவிக்கிரகங்கள் முடிக்கப்படாமல் அங்கு இருந்தன. அது முதல் ஒவ்வொரு பனிரெண்டு ஆண்டுகளிலும் அவ் விக்கிரகங்கள் மாற்றப்பட்டு புதிய விக்கிரகங்கள் வைக்கப்படுகின்றன.

அதற்கான மரம் தெய்வீக சக்தி உள்ளவருக்குத் தென்படுமாம். பழைய விக்கிரகத்திலிருந்து ஏதோஒரு பொருளை அர்ச்சகர் தம் கண்களைக் கட்டிக் கொண்டு வெளியே எடுத்து அதை புது விக்கிரத்தில் வைப்பாராம். அப் பொருள் புத்தர் பிரானின் பல் என்று கருதப்படுகிறது. இது ரத யாத்திரைக்கு முன் செய்யப்படும் நவ கலேபரம் என்ற விழா.

ரத யாத்திரை கிருஷ்ணர் கோகுலத்திலிருந்து மதுராபுரிக்குச் செல்வதாகக் கருதப் படுகிறது. கிருஷ்ணர், பலராமர், சுபத்திரை ஆகிய விக்கிரகங்கள் ரதங்களில் வைத்து இழுத்து செல்லப்படுகின்றன. இவற்றில் மிகப் பெரிய தேரில் ஜகன்நாதர் விக்கிரகம் இருக்கும். அத் தேரின் உயரம் 14-மீ. அகலம் 11 மீ. 16 சக்கரங்களைக் கொண்டது. இந்தத் தேர்களை இழுப்பதாலும் விக்கிரகங்களைத் தொடுவதாலும் பிறப்பு இறப்பு என மீண்டும் ஏற்படாது என்று மக்கள் நம்புகிறார்கள். 8 நாட்கள் ரத யாத்திரை முடிந்து விக்கிரகங்கள் மீண்டும் ஆலயத்துள் எடுத்துச் செல்லப்படுகின்றன.



ஒடிஸ்ஸி நடனம் இம் மாநிலத்தின் சாஸ்தீரிய நடனம். இது புரிகோவிலில் அனுஷ்டிக்கப்படும் முறைகளின் அடிப்படையில் அமைந்தது. நடனமாடுவோர் இடுப்பிலிருந்து கால்கள் வரை விசிறி மடிப்பு கொண்ட ஆடைகளை அணிந்து வெள்ளி நகைகளையும் காகிதப் பூக்களையும் வைத்து கொள்கிறார்கள். நடனம் ஆடுமுன் ஆலயத்திலுள்ள மூன்று விக்கிரகங்களையும் வணங்கிவிட்டு ஒரிய பக்திப் பாடல்களுக்கும் ஜெயதேவரின்கீத கோவிந்த அஷ்டபதிகளுக்கும் அபிநயம் பிடிக்கிறார்கள்.

புரியிலிருந்து 16 கி.மீ. தொலைவில் ரகுராஜ்பூர் என்ற ஊர் உள்ளது. இங்குள்ள ஓவியர்கள் துணிகளின் மீது ஓவியங்களை வரைகிறார்கள்.

இன்னும் 10 கி.மீ. சென்றால் சாட்சி ஆலயம் வருகிறது. இது கிருஷ்ணர் கோவில். இரு அந்தணர்களிடையே ஏற்பட்ட ஒரு வழக்கிற்கு சாட்சி சொல்ல இங்கு கிருஷ்ண பகவானே வந்தாராம். அதனால்தான் இதற்கு இப் பெயர் வந்ததாம்.

ஒரிய நடனமாது.



ओड़िसी नृत्य की
एक मुद्रा



# விஷக்கடி வைத்தியம்

கேசரிபுரத்தில் கேசவன் என்ற விவசாயி இருந்தான். அவனுக்குக் கொஞ்சம் நிலம் இருந்ததால் அதில் பயிர் செய்து சிரமப்படாமல் வாழ்ந்து வந்தான். அவன் மனதில் ஒரு ஆசை இருந்தது. யாரையாவது பாம்பு கடித்து விட்டால் அந்த விஷத்தை இறக்கி அவனை உயிர்ப்பிக்கத் தனக்கு அதற்கு மந்திரம் தெரிய வேண்டுமென அவன் விரும்பினான்.

அதனால் யாரைப் பார்த்தாலும் அவரிடம் பாம்பு கடித்தால் அதன் விஷத்தை இறக்கும் மந்திரம் தெரியுமா என்று கேட்கலானான். எல்லோருமே தமக்குத் தெரியாது என்றே பதில் கூறவே அவன் ஏமாற்றம் அடைந்தான். ஆனாலும் அக் கேள்வியைத் தான் புதிதாகச் சந்திப்பவரிடம் கேட்கத்தான் கேட்டு வந்தான்.

ஒருமுறை ஒரு பெரியவரிடம் அவன் அக் கேள்வியைக் கேட்கவே அவரும் ''இதெல்லாம் யோகிகளுக்கும் சித்தர்களுக்கும் தெரியும். அவர்களிடம் கேள்'' என்றார். அது முதல் தாடி வைத்துக் கொண்டு சாது, சன்னியாசி என்று வந்தவர்களிடம் எல்லாம் அவன் தன் கேள்வியைக் கேட்கலானான். அவர்கள் கூடத் தமக்குத் தெரியாது என்றே பதில் கூறினார்கள்.

ஒரு முறை அவன் தன் நிலத்தில் நன்கு விளைந்திருந்த சோளப் பயிருக்குக் காவல் இருக்க ஒரு நாளிரவு அங்கு பரண் மீது இருந்தான். சோளக்கதிரும் நன்கு முதிர்ந்திருந்தது. அப்போது அவனது நிலவரப்பின் மீது சன்னியாசிகளின் கூட்டம் ஒன்று வரவே கேசவன் ஓடிப் போய் அவர்களில் உயரமாயும் நீண்ட அடர்ந்த தாடியும் கொண்டிருந்த ஒரு சன்னியாசியை வணங்கி ''சுவாமி! தங்களுக்கு விஷக்கடியைப் போக்கும் மந்திரம் தெரியுமா? தெரிந்திருந்தால் எனக்கு உபதேசியுங்கள்'' என்று வேண்டினான்.

அவரும் அந்த வயலை ஒரு முறை

—சங்கர சுவாமிநாதன்—



பார்த்து விட்டு ''ஓ! தெரியும். எப்படிப் பட்ட விஷப் பாம்பு தீண்டினாலும் அதன் விஷத்தைப் போக்கி பாம்பு கடித்த மனிதனைப் பிழைக்க வைக் கும் மந்திரம் எனக்குத் தெரியும். அதை நாளைக் காலையில் சூரியோதயம் ஆகும் போது உனக்கு உபதேசிக் கிறேன். இன்றிரவு நாங்கள் எல்லோ ரும் உன் வயலில் படுத்து இளைப்பாற அனுமதிக்க வேண்டும்'' என்றார். கேசவனும் ''தாராளமாகத் தங்கிவிட் டுப் போகலாம்'' என்று கூறினான்.

அந்த சன்னியாசிகள் அந்த வயலில் இறங்கி நன்கு முதிர்ந்திருந்த சோளக் கதிர்களை ஒடித்து அவற்றிலிருந்த சோள மணிகளை உதிர்த்து வயிறு நிறையத் தின்றார்கள். இதனால் அந்த சோளக் காடே பாழகியது. அதைக் கண்டும் கேசவன் வருத்தப்பட வில்லை. ஏனெனில் மறுநாள் காலை தனக்கு விஷக் கடியைப் போக்கும் மந்திரம் உபதேசிக்கப்படும் என்று எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தான்.

காலை சூரியோதயம் ஆகும் போது கேசவன் தான் முன்தின இரவில் கண்டு பேசிய சன்னியாசியின் முன் போய் அவரது கால்களில் விழுந்து வணங்கித் தனக்கு விஷக்கடியைப் போக்கும் மந்திரோபதேசம் செய்யும் படி வேண்டினான்.

அவரும் ''ஜோகி ஆயே, ஜ்வார் காயா, உட்ரே பாகல்'' எனக் கூறவே கேசவனும் அது தான் விஷக்கடியைப் போக்கும் மந்திரம் என எண்ணி அதை உருப் போட்டுக் கொண்டான். சன்னி யாசிகளும் போய்விட்டார்கள்.

கேசவனுக்கு பாம்பு கடித்தால் விஷத்தை இறக்கும் மந்திரம் தெரியும் என்பது அவ்வூராருக்குத் தெரிந்தது. இதற்கு பத்து நாட்களுக்குப் பின் அவ் வூரில் ஒருவனைப் பாம்பு தீண்டி விட்டது அவனை கேசவனிடம் கொண்டு வரவே அவன் சன்னியாசி உபதேசித்த மந்திரத்தைக் கூறி பாம் பால் கடியுண்ட மனிதனின் தோளில் ஓங்கி ஒரு அடி அடித்தான். அந்த மனி தன் உயிர் பெற்று எழுந்துவிட்டான்!

அன்று முதல் அந்த ஊரிலோ அல் லது சுற்றுப் பக்க கிராமங்களிலோ யாரையாவது பாம்பு கடித்துவிட்டால் அவனைத் தூக்கி வந்து கேசவனின் முன் போடலானார்கள். கேசவனும் தான் கற்ற மந்திரத்தை ஓதி பாம்பால் கடிபட்டவனின் தோளில் ஓங்கித் தட்ட அவன் உயிர் பிழைத்து எழுந்து விடலானான். இதனால் தட்சிணை யாக கேசவனுக்கு நிறையப் பணம்

சேரலாயிற்று. அதனால் அவ்வூரின் நடுவில் ஒரு இடத்தை வாங்கி அழகிய வீட்டைக் கட்டியும் பல வயல்களை வாங்கியும் பெரிய பணக்காரனாகி விட்டான். தன் மகளைப் பணக்கார இடத்தில் கல்யாணம் செய்தும் கொடுத்தான். ஆயினும் படாடோப மாக வாழாமல் எப்போதும் போல வாழ்ந்து வந்தான்.

சில வருடங்கள் கழிந்தன. பல வருடங்களுக்கு முன் பட்டாளத்தில் சேர்ந்த குமரன் தன் ஊரான கேசரி புரத் திற்கு வந்தான். அவன் தன் நண்பன் கேசவன் மிகவும் உயர் நிலையை அடைந்துள்ளது கண்டு மகிழ்ச்சியும் ஆச்சரியமும் அடைந்தான். அவன் கேசவனைக்காணப் போகவே, கேசவ னும் அவனை அன்புடன் வரவேற்று வெகு நேரம் பேசிக் கொண்டிருந் தான். அப்போது குமரன் ''நீ பாம்பு கடி மந்திரம் கொண்டு பாம்பு தீண்டியவர்களைப் பிழைக்க வைத்து பணமும் நிறைய சம்பாதித்து எல் லோருக்கும் உதவி வருகிறாயே அந்த மந்திரம் என்ன?'' என்று கேட் டான்.

கேசவன் ''அந்த மந்திரம் இதுதான் ஜோகி ஆயே, ஜ்வார் காயா, உட்ரே பாகல். இதை மனதார நம்பி கடவுளை நினைத்து உச்சரித்துப் பாம்பு கடித்தவ னின் தோளில் தட்டி அவனை உயிர்ப் பிக்கிறேன்'' என்றான். குமரனும் பல மாகச்சிரித்து ''இது ஹிந்தியில் உன்னி டம் கூறப்பட்ட சாதாரண வாக்கியங் கள். உன்னை அப்பாவி என்று கண்டே இப்படிச்சொல்லி விட்டு அந்த சன்னி யாசி போயிருக்கிறான். இதன் பொருள் சாது வந்தார், சோளம் தின் றார், எழுந்திருடா பைத்தியமே என் பதாம்'' என்றான்.

கேசவனும் ''அப்படியா! இது வரை இதை விஷக்கடியைப் போக் கும் மந்திரம் என முழு மனதுடன் நம்பி கடவுளை வேண்டி இதை உச்ச ரித்து பாம்பு தீண்டியவனின் உடலி



லிருந்து விஷத்தைப் போக்கடித்து அவனை உயிர்ப்பித்து வந்தேன். இப்போது இது மந்திரமே அல்ல என்று எனக்குத் தெரிந்த விட்டதால் அதன் மீது உள்ள நம்பிக்கை போய்விட்டது. இனிமேல் பாம்பு தீண்டிய யாரையும் என்னால் பிழைக்க வைக்க முடியாது என்றே நம்புகிறேன்'' என்றான்.

குமரனும் ''நீ சொல்வது சரிதான். சாது சாதாரணமாகச் சொன்னதை கள்ளங் கபடற்ற உன் மனம் விஷக் கடியைப் போக்கும் மந்திரம் என எண்ணியது. நீயும் எவ்வித லாபமும் எதிர்பாராமல் பாம்பு தீண்டியவன் பிழைக்க வேண்டும் என எண்ணிக் கடவுளை வேண்டிக் கொண்டு முழு நம்பிக்கை கொண்டு நீ மந்திரம் என நினைத்துக் கூறினாய். கடவுள் உன் கள்ளம் கபடற்ற மனம் செய்த பிரார்த்தனையை ஏற்று பாம்பு கடித்தவன் பிழைக்கும் படியும் செய்தார்'' என் றான்.

கேசவனும் ''ஆமாம் நீ கூறுவது சரி என்றே தோன்றுகிறது. இதுவரை அந்த சாதாரணச் சொற்களை மந்திரம் என அந்தரங்க சுத்தியாக எண்ணியே உச்சரித்தேன். அதனால்தான் இறக்கும் நிலையில் இருப்பவனும் பிழைத்து வந்தான். இது மந்திரம் இல்லை என்று தெரிந்ததால் இனி மேல் பலிக்காது'' என்றான்.

சில நாட்களுக்குப் பின் யாரோ, ஒருவனைப் பாம்பு தீண்டிவிட்ட தாகக் கூறி கேசவனிடம் கொண்டு வந்தார்கள் கேசவனும் தான் கற்ற மந்திரத்தைக் கூறி அவனது தோளில் தட்டினான். ஆனால் அவன் எழுந்திருக்கவில்லை. அப்போது கேசவன் ''என் மந்திரத்தின் சக்தி போய் விட்டது. இனிமேல் அது பயன் படாது அதனால் இவனை இப் போதே அடுத்த ஊர் மருத்துவமனைக்கு எடுத்துச் சென்று சிகிச்சை பெறுங்கள்'' என்று கூறினான்.

அவன் தனது மந்திரத்தின் சக்தி போய்விட்டது என்று எல்லோர் முன்னும் கூறியதால் பாம்பு தீண்டியவனை அடுத்த ஊர் மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றார்கள். அன்று முதல் பாம்புகடி சிகிச்சை பெற கேசவனிடம் யாரும் வரவில்லை. கேசவனும் இல்லாததற்கெல்லாம் ஆசைப்படக் கூடாது என உணர்ந்து கிடைத்தது போதும் என்ற திருப்தியுடன் வாழ்ந்து வரலானான்.





அம்புலிமாமா

# பொன்மயமான பொழுதுகள் - 16

***1. ...இந்த கம்பம் ஒரு மேடை மீது உள்ளது.***

இது எவ்விதத்திலும் மேடையுடன் இணைக்கப் படவில்லை. 900 ஆண்டுகளுக்கு முன் ஹோய் சால மன்னன் விஷ்ணுவர்த்தனன் இதனை நிறுவினான்.



## உலகில் இவற்றை எங்கு காண்பீர்கள்?



***2. ...உலகில் மிக உயரத்திலுள்ள ரயில் பாதை***

கடல் மட்டத்திற்கு மேல் 4816மீ. உயரத்திற்கு ரயில் இப்பாதையில் ஏறும் போது சில பயணிகளுக்குப் பிராண வாயுதேவைப்படுகிறது. ஏனெனில் உயரச் செல்லச் செல்ல காற்றழுத்தம் குறைகிறது. தேவைப்பட்டால் மருத்துவ உதவிக்கு இந்த ரயிலில் செவிலியர்கள் கூட இருக்கிறார்கள்.

***3. ...உப்புப் பாறையால் உரு வான சுரங்க நகரம்.***

உப்புச் சுரங்கம் ஒன்றின் நடுவே தரை மட்டத்திற்கு 300 மீ. கீழே பல ஆண்டுகள் சுரங்கத் தொழிலாளிகள் உழைத்து உருவாக்கிய நகரமே இது. இதில் ஒரு மாதா கோவிலும், ஒரு ரயில் நிலையமும், நடன மாட பெரிய அரங்கமும் உள்ளன. இவையாவும் உப்பால் ஆனவை.



## உயிரினங்கள் புதிர்

# நான் யார்?

1. நான் குட்டையான இறக்கைகளுடைய ஒரு பறவை. என்னால் பறக்க முடியாது. ஆனால் நீந்த முடியும்.

2. மனிதர்களைப் போல நான் எல்லா விதத்திலும் இருப்பேன். ஆனால்நடப்புது மட்டும்நுனிவிரல்களால்தான்.

3. நான் உயிரினங்களில் மிகப் பெரியது.

4. நான் பறக்க இயலாத பறவை. என் பெயரில்தான் என் நாடும் உள்ளது.





5. நான் பறவைகளில் மிகப் பெரியது.

6. எனக்கு ஒரு திமில் உண்டு. என்னைப் பாலைவனக் கப்பல் எனக் கூறுகிறார்கள்.

7. ஆஸதிரேலியக் காட்டு நாய் எனவும் என்னை அழைக்கிறார்கள்.

## கதைப் புதிர்

# அந்தத் தவறு

மணியனுக்கு மாணவர் விடுதியிலுள்ள ஒரு மாணவன் நிறையப் பணம் வைத்திருக்கிறானென்று தெரிந்தது. அவன் தன் வீட்டின் முன்னிருந்த சைக்கிள் கடையில் ஒரு வாடகை சைக்கிளை எடுத்துக் கொண்டு அந்த மாணவர் விடுதிக்குப் போய் சைக்கிளை ஸ்டாண்டில் நிறுத்தி விட்டு அந்த மாணவனின் அறைக்குச் சென்றான். அவன் அறையின் பூட்டை உடைத்துக் கொண்டு உள்ளே போய் பணத்தைத் திருடிக் கொண்டு வேகமாக சைக்கிள் ஸ்டாண்டிற்கு வந்தான். சைக்கிளில் ஏறிச் சிட்டாய்ப் பறந்தான். ஆனால் திடீரெனத் தான் செய்த தவறு அவனுக்குப் புரிந்தது. உடனே அவன் மாணவர் விடுதிக்குத் திரும்பினான். ஆனால் அதற்குள் கால தாமதமாகி விட்டது. மாணவர்கள் திருட்டுப் போனதைக் கண்டு பிடித்து விட்டார்கள். மணியன் மாணவர் விடுதிக்குள் போகாமல் சைக்கிளைத் தன் வீட்டிற்கு ஓட்டிச் சென்றான். போலீஸ் தன்னைக் கண்டு பிடித்து விடும் என்று அவனுக்குத் தெரியும். அது எப்படி?



## மூளைக்கு வேலை

### இந்தச் சிக்கலான கேள்விகளை கவனியுங்கள்

1. ஒரு தேனீ தத்தவோ பறக்கவோ ஏன் முடியாது?
2. ஒரு ஆஸ்திரேலியப் பழங்குடி மகன் ஒரு வளைவான் அம்பைத் தனக்கே திரும்ப வரும் விதத்தில் எய்யக் கூடியவன். நாம் ஒரு டென்னிஸ் பந்தால் இது போலச் செய்து காட்டலாம். அது எப்படி?



3. இந்தப் படத்திலுள்ள தவறு என்ன?



4. என் நண்பன் ஒரு பேப்பரையும் பென்சிலையும் எடுத்துக் கொண்டு "என்னால் என் இடது காதால் வரைய முடியும்" என்றான். நான் அவனால் வரைய முடியாது எனவே அவன் வரைந்து காட்டினான். அது எப்படி?
5. ஒரு யானை உன் கைக்குட்டையின் மீது உட்கார்ந்தால் நீ என்ன செய்வாய்?



6. கன்று ஒன்றரை வருடமான பின் எவ்வாறு அழைக்கப்படும்?
7. ஒரே சமயத்தில் எல்லோரும் செய்யும் ஒன்று என்ன?

## செயல் முறை

### புள்ளியுள்ள தீப்பெட்டி நாய்க்குட்டி

**தேவையானவை:**

இருகாலி தீப்பெட்டிகள், மூன்று மர ஐஸ்கிரீம் குச்சிகள். தீப் பெட்டிகளில் ஒட்ட வெள்ளைக் காகிதம், ஒரு பேனாக் கத்தி, கருப்பு ஃபெல்ட் பேனா, பசை.

**செயல்முறை:**

1. தீப்பெட்டிகளைச் சுற்றி வெள்ளைக் காகிதத்தை ஒட்டவும். ஐஸ்கிரீம் குச்சிகளுக்குச் கருப்பு நிறம் கொடுக்கவும்.

2. ஒரு ஐஸ்கிரீம் குச்சியை ஒரு தீப் பெட்டியின் ஆழப் பகுதியினுள்ளும் மற்ற தீப்பெட்டியின் மேல் பகுதியிலும் சொருகவும்.

3. இரண்டாவது ஐஸ்கிரீம் குச்சியைப் பாதியாக உடைத்து ஒன்றை வால் போலவும் மற்றதைக் கால் போலவும் இருக்கச் சொருகவும்.

4. கண்ணையும் வாயையும் முகத்தில் வரைந்து உடற் பகுதிகளில் கருப்புப் புள்ளிகளை வைத்தால் நாய்க் குட்டி கிடைத்து விடும்!



## நாமும் வரைவோம்



*5 என்ற எண்ணை நீங்கள் மாற்றும் விதம்...*







கோபிக்கும் பறவை

6 என்ற எண்ணால்







அழும் குழந்தை!

## பொன்மயமான பொழுதுகள் 15ன் விடைகள்

### உலகில் எங்கு?

1. தென் அமெரிக்காவின் கௌதமாலா.

2. ஜாடிங்கா (அஸ்ஸாம்) 3. துருக்கியின் இஸ்டான் புல்

### படப் புதிர்

1. ஆக்டோபஸ், 2. சுறாமீன், 3. நட்சத்திர மீன், 4. டால்பின், 5. கடல் ஆமை, 6. ஜெல்லி மீன்.

### கதைப் புதிர்

கண்ணாடி ஜன்னல் வெளியிலிருந்து உடைக்கப்பட்டிருந்தால் கண்ணாடித் துண்டுகள் வீட்டிற்குள் விழுந்திருக்கும். வீட்டினுள்ளிருந்து ஜன்னலின் கண்ணாடி உடைக்கப்பட்டதால் கண்ணாடித் துண்டுகள் வீட்டின் வெளியே தோட்டத்தில் விழுந்து கிடந்தன. அச்சமயம் வீட்டில் இருந்தவன் காவல்காரன் ஒருவனே. அதனால் அவன்தான் திருடன்.

### மூளைக்கு வேலை

1. 'ஏ' கப்பில் ஒரு கட்டியும், 'பி'யில் இரண்டு கட்டிகளும் 'சி' கப்பில் மூன்று கட்டிகளும் போட்டு 'பி'யை 'சி'யில் போட்டால் எல்லா கப்களில் ஒற்றைப் படை எண்ணில் கட்டிகள். 2. உங்கள் தாயார். 3. நிலக்கரி, 4. ஒன்றே. ஒரு குரங்கை வைத்த பின் அந்தக் கூண்டு காலி இல்லையே. 5. ஏனெனில் அவை நடக்க முடியாது. 6. நின்று போன கடிகாரம்.




விராட மன்னனிடம் போய்ச் சேர்ந்த பாண்டவர்களும் துரௌபதியும் தம் அஞ்ஞாத வாசத்தைக் கழித்து வரலானார்கள். தருமர் விராட மன்னனுடன் சதுரங்கம் விளையாடி நிறையப் பணத்தை வெற்றி பெற்று அடைந்தார். அதைத் தன் தம்பிகளுக்குப் பகிர்ந்து கொடுத்து வந்தார். பீமன் ருசிகரமான உணவு சமைத்து எல்லோருக்கும் கொடுத்து வந்தான். அந்தப்புரத்தில் தனக்குக் கிடைக்கும் பழந்துணிகளை அர்ஜுனன் எல்லோருக்கும் கொடுத்தான். அது போல நகுலனும் குதிரைகளை நன்கு கவனித்து மன்னனிடம் பெற்ற பரிசுகளை மற்ற சகோதரர்களுக்கும் கொடுத்து வந்தான். சகதேவனும் மாடுகளை நன்கு கவனித்து அவற்றின் பாலை யாவருக்கும் பகிர்ந்து கொடுத்தான். துரௌபதியும் பஞ்சபாண்டவர்களையும் நன்கு கவனித்து வந்தாள்.

இவ்வாறாக நான்கு மாதங்கள் கழிந்தன. அப்போது மத்ஸ்ய நாட்டில் பிரம்மோற்சவம் நடக்கவே அதில் கலந்து கொள்ள பல நாட்டு வீரர்களும், மல்லர்களும் வந்திருந்தார்கள். விராட மன்னனுக்கு மல்லர்கள் சண்டை போடுவதைக் காண்பதில் மிகவும் ஆர்வம் உண்டு.

அம்முறை வந்த மல்லர்களில் ஜீமூதன் என்பவன் அநேகமாக எல்லா மல்லர்களையும் தோற்கடித்து விட்டு இன்னும் யாராவது தன்னுடன் மற்போர் புரிய இருக்கிறார்களா என்று சவால் விட்டான். அப்போது விராட மன்னன் தன் சமையல்காரனாக வல்லவன் என்ற பெயரிலுள்ள பீமனை அழைத்து ஜீமூதனுடன் சண்டை போடும்படிக் கட்டளை இட்டான். பீமனும் ஜீமூதனுடன் மற்போர் புரிய வந்து நின்றான்.

இருவரும் இரு மதம் பிடித்த யானைகள் மோதிக் கொள்வது போல பயங்கரமாகத் தாக்கிக் கொண்டார்

**—கீசகனின் துடுக்கு—**




கள். அதுவரை எல்லா மல்லர்களை யும் தோற்கடித்த ஜீமூதன் பீமனிடம் அகப்பட்டுக் கொண்டு விழித்தான் பீமன் அவனை அலாக்காகத் தூக்கி 'கிர், கிர் ரென்று சுற்றித் தரை மீது எறிந்தான். அவ்வளவுதான். ஜீமூதன் மறுபடியும் எழுந்து வரவே இல்லை. பீமனது வெற்றியை யாவரும் பாராட்டினார்கள். மன்னனும் அவ னுக்கு நிறையப் பரிசுகளை அளித்து கௌரவித்தான்.

விராட மன்னன் அவ்வப்போது பீமனைப் புலிகளுடனும் சிங்கங்களு டனும் சண்டை போட வைத்து வேடிக்கை பார்க்கலானான். பீமன் அதை சர்வ சாதாரண விளையாட் டாகவே கருதினான். அர்ஜுனன் அந்தப்புரத்திலுள்ள பெண்களுக்கு இசையையும் நாட்டியத்தையும் கற் றுக் கொடுத்து யாவரையும் மகிழ் வித்து வந்தான். நகுலன் முரட்டுக் குதிரைகளை அடக்கி மன்னனின் பாராட்டுதல்களையும் பரிசுகளையும் பெற்று வந்தான். சகதேவனும் கட்டுப் படாமல் முரண்டு பிடிக்கும் பசு மாடுகளை வழிக்குக் கொண்டு வந்து நிறையப் பால் கொடுக்கும்படிச் செய்து மன்னனின் பாராட்டுகளையும் பரிசுகளையும் பெற்றார்கள்.

பாண்டவர்களின் அஞ்ஞாநவாச காலமாகிய ஓராண்டு முடியும் தருணத் திற்கு வந்தது. அப்போது விராட மன் னனின் மைத்துனன் கீசகனின் கண் தன் சகோதரியிடம் பணிப் பெண் ணாக இருந்த சைரந்திரியின் மீது பட்டு விட்டது. அவன் அந்நாட்டின் சேனாதிபதியும் ஆவான். அவன் தங்கையான ராணி சுதேஷ்ணையி டம் ''உன் பணிப்பெண் மிக அழகாக இருக்கிறாளே. எங்கிருந்து வந்தாள்? இவளை அடைய நான் விரும்புகி றேன்'' என்று சற்றும் வெட்கப்படா மல் கூறினான்.

சுதேஷ்ணையோ ''அவளை அடைய எண்ணாதே. அவளது கண வர்கள் ஐந்து கந்தர்வர்களாம். அவ ளுக்கு யாராவது கெடுதல் செய்ய நினைத்தால் அவர்கள் அவனைக் கொன்று விடுவார்களாம். நீ இவளை அடைவதற்காக கந்தர்வர்களைப் பகைத்துக் கொண்டு ஏன் வீணாக மரணத்தை வரவழைத்துக் கொள் கிறாய்? வேண்டாம் இந்தக் கெட்ட ஆசை. இதனை விட்டு விடு'' என் றாள்.

கீசகனோ ''என்னை கந்தர்வர் களால் எதுவும் செய்து விட முடியாது.



எனக்கு உள்ள பலம் எந்த தேவனுக்கும், யட்சனுக்கும் கந்தர்வனுக்கும் கிடையாது. நீ அவளை ஏதாவது ஒரு காரணம் சொல்லி என் மாளிகைக்கு அனுப்பு. நான் அவளை எப்படியாவது என் வசப்படுத்திக் கொள்கிறேன்'' என்று கூறினான்.

சுதேஷ்ணையோ ''இது மகாப் பாவம். சைரந்திரி என்னிடம் தஞ்சம் புகுந்தவள். மணமானவள். அவளை நீ அடைய விரும்புவது உனக்கும் அழிவு, நம் குடும்பத்திற்கும் கெடுதல். இந்த ஆசையை விட்டு விடு'' என்று சொல்லிப் பார்த்தாள். கீசகனோ ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ அவளை ஏதாவது ஒரு வேலையைச் சொல்லி என் மாளிகைக்கு அனுப்பி வைக்கத்தான் வேண்டும். இல்லாவிட்டால் விபரீதமே நடக்கும்'' என பயமுறுத்தினான்.

சுதேஷ்ணையும் ''சரி. விதி யாரை விட்டது? நான் சொல்ல வேண்டியதைச் சொன்னேன். நீயோ கேட்கவில்லை. நீ விரும்புகிறபடியே ஏதாவது ஒரு வேலையாக அவளை உன் மாளிகைக்கு இன்னும் சற்று நேரத்தில் அனுப்புகிறேன். நீ அங்கே போய் இரு'' என்று கூறி அவனை அனுப்பினாள்.

கீசகன் சென்ற பின் சுதேஷ்ணை சைரந்திரியை அழைத்து ''கீசகனிடம் புதிய ரக மது வந்துள்ளதாம். எனக்குக் கொஞ்சம் அதிலிருந்து அனுப்புவதாகச் செய்தி அனுப்பி இருக்கிறான். நீ இந்த வெள்ளிப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு அவனது மாளிகைக்குப் போய் அவனைப் பார்த்து அந்த மதுவைக் கொடுக்கும்படிக் கேட்டு இதில் வாங்கிக் கொண்டு வா'' என்றாள்.

சைரந்திரியும் தயங்கியவாறே ''என்னையா அவரது மாளிகைக்கு அனுப்புகிறீர்கள்? வேறு யாரையாவது அனுப்பக் கூடாதா? ஏனெனில் அவர் என்னை அடிக்கடி வெறித்துப் பார்ப்பதை நான் கவனித்திருக்கிறேன். இப்போது நான் போனால் என்ன நடக்குமோ?'' என்றாள். சுதேஷ்ணையும் ''பயப்படாதே. உனக்கு ஒரு தீங்கும் செய்யமாட்டான். அவன் மதுவைக் கொடுப்பான். நீ வாங்கிக்கொண்டு வந்து விடு. இரண்டே நிமிட வேலைதான்'' என்று கூறி அவளைக் கீசகனின் மாளிகைக்கு அனுப்பினாள்.

சைரந்திரியும் சுதேஷ்ணை கொடுத்த வெள்ளிப் பாத்திரத்தை வாங்கிக் கொண்டு கீசகனின் மாளி

கைக்கு சென்றாள். சைரந்திரி தயங்கியவாறேதான் உள்ளே அடி எடுத்து வைத்தாள். கீசகன் என்ன செய்வானோ என்று அவள் பயந்த கொண்டிருந்தாள். அவளைக் கண்ட கீசகன் மிகவும் மகிழ்ந்து போய் ''ஓ! உன்னை சுதேஷ்ணை அனுப்பினாளா? உன்னுடன் உட்கார்ந்து பேசி உல்லாசமாகப் பொழுதைப் போக்க எப்போது சந்தர்ப்பம் கிடைக்கும் என்று எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். அது இன்று இப்போதுதான் கிடைத்திருக்கிறது'' என்று பல்லைக் காட்டி இளித்துக் கொண்டே அவளை நெருங்கினான்.

சைரந்திரியோ ''ராணியார் தங்களிடமிருந்து மதுவை வாங்கிக் கொண்டு வரும்படி என்னை அனுப்பினார். இதில் மதுவை நிரப்பித் தாருங்கள். நான் எடுத்துக் கொண்டு போகிறேன்'' என்று கூறி தான் கொண்டு வந்த பாத்திரத்தை நீட்டினாள். கீசகனோ ''நீ இப்படி உட்கார். நான் மதுவை வேறு யாரிடமாவது கொடுத்து அனுப்புகிறேன்'' என்றான்.

சைரந்திரி சட்டெனத் திரும்பிப் போகலானாள். கீசகன் ஓடிப் போய் அவள் கையைப் பிடித்து இழுத்தான். அவள் திமிறி கையை விடுவித்துக் கொண்டு அந்த மாளிகையிலிருந்து வெளியே ஓடி வந்து ''என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று கூவியவாறே அரச சபைக்கு ஓடினாள். கீசகனும் அவளைத் துரத்திக் கொண்டே அரச சபைக்குள் நுழைந்து அவளது தலை மயிரைப் பற்றி இழுக்கலானான்.

இதைக் கண்ட சபையோர் திகைத்தனர். இந்த அருவருக்கத் தக்கக் காட்




சியை அப்போது சபையிலிருந்த தருமரும் பீமனும் பார்த்தார்கள். பீமனின் கைகள் துடித்தன. அவன் வெளியே இருந்த ஒரு மரத்தைப் பிடுங்கப் பார்த்தான். அவனது எண்ணத்தைப் புரிந்து கொண்ட தருமர் ''வல்லபா! நீ பார்க்கும் மரத்தை விறகாகப் பயன்படுத்த முடியாதே அதைப் பிடுங்காதே'' என்று கூறவே பீமன் எதுவும் செய்ய முடியாமல் நின்றான்.

அப்போது துரௌபதி விராட மன்னனிடம் ''இந்தக் கயவன் என்னை இப்படி அவமானப்படுத்த முயலும் போது காலத்தால் கட்டுப் பட்டுக் கிடக்கும் என் கணவர்களான ஐந்து கந்தர்வர்களும் இப்போது எதுவும் செய்ய முடியாத நிலையில் இருக்கிறார்கள். அதனால் இப்போது மன்னராகிய நீங்கள்தாம் நியாயம் வழங்க




ரன் அனுபவிக்கத்தான் போகிறான் அது மிகவும் பயங்கரமாக இருக்கும்'' என்றாள். அதுகேட்டு சுதேஷ்ணை பயந்து போய்'' நீ சொல்வது உண்மையா? உன் கந்தர்வக் கணவர்கள் வந்து என் சகோதரனைக் கொன்று விடுவார்களா? எனக்குப் பயமாக இருக்கிறதே'' என்றாள்.

சைரந்திரியும் ''நான் அப்போதே தங்களிடம் என்னை உம் சகோதரனின் மாளிகைக்கு அனுப்ப வேண்டாம் என்று கூறினேன். நீங்களோ அதைக் கேளாமல் என்னை அனுப்பியதால் உங்கள் சகோதரன் வம்பை விலைக்கு வாங்கி விட்டான்'' என்றாள்.

சைரந்திரியோ கீசகனைக் கொன்று விட வழி தேடு வதில் முனைந்தாள்.

அன்றிரவு சைரந்திரி பீமனை அவனிருக்கும் இடத்திற்குப் போய்க் கண்டாள். ''சபையில் அந்தக் கீசகன் என்னை அவமானப்படுத்திய போது நீங்கள் ஏன் ஒன்றும் செய்யாமல் இருந்தீர்கள்?'' என்று கேட்டாள். பீமனும் ''நான் அப்போதே அந்தக் கீசகனை அடித்து நொறுக்கி இருப்பேன். ஆனால் என் தமையனார்தான் நான் அவ்வாறு செய்யக் கூடாது என்று தடுத்து விட்டார். இது போலத்தான் கர்ணனையும் துச்சாதனனையும் எதுவும் செய்யக் கூடாது என்று தடுத்து விட்டார். அன்று மட்டும் என்னை விட்டிருந்தால் அந்த துரியோதனனின் கூட்டத்தையே ஒழித்திருப்பேன். இன்று இவ்வளவு கஷ்டங்களை நாம் அனுபவிக்க வேண்டி இருந்திருக்காது'' என்றான்.

சைரந்திரியும் ''நடந்ததைப் பற்றி வீணாக யோசிப்பதில் பயனில்லை.

வேண்டும்'' என்றாள்.

அப்போது விராட மன்னன் ''பெண்ணே! உங்கள் இருவரிடையே என்னத் தகராறு என்று தெரியாதே. இந்நிலையில் நான் என்ன நியாயம் வழங்க முடியும்?'' என்று சைரந்திரியைப் பார்த்துக் கேட்டான். அப்போது தருமர் ''பெண்ணே! நீ நேராக அந்தப்புரத்திற்குப் போய்விடு. உன் கந்தர்வக் கணவர்கள் இந்த சமயத்தில் உனக்கு உதவ வராது போனாலும் இன்னொரு சமயம் வரலாம். எனவே உன் புலம்பலை நிறுத்தி விட்டு உடனே இங்கிருந்து செல்'' என்றார்.

சைரந்திரியும் அந்தப்புரத்திற்குப் போய் சுதேஷ்ணையிடம் நடந்ததைக் கூறினாள். பிறகு அவள் ''இந்த விவகாரம் இப்படியே போய் விடாது. இதற்கான பலனை உங்கள் சகோத

இப்போது என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்வோம். இந்தக் கீசகன் பலம் பொருந்தியவன். நாட்டின் சேனாதிபதி. இவற்றை நினைத்தும் அவன் தன் மைத்துனன் என்றும் எண்ணியும் விராட மன்னன் எதுவும் செய்ய முடியாமல் தத்தளிக்கிறான். எனக்கு ஐந்து கந்தர்வர்கள் கணவர்கள் என்று கூறி கீசகனை பயமுறுத்திப் பார்த்தேன். ஆனால் அவன் தான் மிகுந்த பலசாலி என்றும் தன்னை யாராலும் எதுவும் செய்ய முடியாது என்றும் வீராப்பு பேசுகிறான். சுதேஷ்ணை என்னை மதுவை வாங்கி வர கீசகனின் மாளிகைக்கு அனுப்பினாள். ஆனால் கீசகனோ வம்பு செய்து என் கையைப் பிடித்து இழுக்கவே நான் திமிறி அரச சபைக்கு ஓடினேன். அங்கும் அவன் வந்து என்னை அவமானப்படுத்தினான். அவன் இனி உயிருடன் இருக்கக் கூடாது. அவனை ஒரேடியாக மேலே அனுப்பிவிட வேண்டியதுதான். இதை நீங்கள் செய்வீர்களா அல்லது எதுவுமே செய்யாமல் இருந்து விடுவீர்களா?'' என்று கேட்டாள்.

பீமனும் ''கவலைப்படாதே. நான் அவனை அரச சபையிலேயே அடித்துக் கொன்றிருப்பேன் ஆனால் என் தமையனார் என்னைத் தடுத்து விட்டதால் அவனை அப்போது ஒழிக்க முடியாமல் போயிற்று. அதனால் என்ன? அவனை ஒழித்து விடலாம். ஆனால் இதற்கு ஒரு திட்டம் போட வேண்டும். நீ அவனை விரும்புபவள் போல நடித்து இரவில் அவன் மட்டும் நர்த்தன சாலைக்கு வரும்படி அவனிடம் சொல்ல வேண்டும். இரவில்தான் நர்த்தன சாலையில் யாரும் இருக்க மாட்டார்கள். அங்கு இருட்டாகவும் இருக்கும். அப்போது ஒருவர் முகம் மற்றவருக்குத் தெரியாது. நான் அங்கே இருந்து அவன் வந்ததும் அவனைப் பிடித்து அடித்து நொறுக்கி அவனது முன்னோர்கள் போய்ச் சேர்ந்த இடத்திற்கே அவனை அனுப்பி வைக்கிறேன். அவன் கதை அதோடு முடிந்து விடும்'' என்றான்.

சைரந்திரியும் ''இதுதான் நான் விரும்பியது. நீங்கள் இதை நாளை இரவே செய்து விடுங்கள். நான் நாளை இரவிலேயே அந்தக் கீசகனைத் தனியாக நர்த்தன சாலைக்கு வந்து விடச் செய்கிறேன்'' என்றாள்.



# செய்திகளில் சிறார்கள்

**ஆறு வயதுச் சிறுவன் கார் ஓட்டுகிறான்!**

சிறுவர்கள் காரில் அமர்ந்து ஸ்டியரிங் வீலைப் பிடித்துக்கொண்டிருப்பது போலப் போட்டோக்கள் எடுத்துக் கொள்ள எவ்வளவு ஆவல் கொள்கிறார்கள் என்பது நமக்குத் தெரிந்ததே. ஆனால் ஆறு வயதுச் சிறுவன் கார் ஓட்டுவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? சென்னையில் வானகரத்தில் சதாசிவன் என்ற ஆறு வயதுச் சிறுவன் 'மாருதி ஆம்னி' காரை ஓட்டுகிறான். சென்ற ஜனவரியிலிருந்து இந்த அற்புதச் செயலைப் புரிந்து கொண்டிருக்கிறான். இவனது தந்தை முரளி, தாய் பத்மாவதி. வானகரத்தில் ஸ்ரீ ஆதித்திய மெட்ரிகுலேஷன் பள்ளியில் முதலாவது வகுப்பில் படிக்கும் இச் சிறுவன் யூகேஜியில் வகுப்பில் முதலாவது இடம் பெற்றவன். பேச்சுப் போட்டியிலும் முதலிடம் பெற்றவன்.



**ஒன்பதாவது வயதில் 'மெட்ரிக்'**

ஒன்பதாவது வயதில் சி.பி.எஸ்.ஈ பாடத் திட்டப்படி பத்தாவது பரீட்சையில் தேர்வது சாதாரண விஷயமா? சென்ற மே மாதத்தில் டில்லியைச் சேர்ந்த ததாகத அவதார் துளசி என்னும் சிறுவன் இந்தப் புதிய சாதனை படைத்திருக்கிறான். எல்லா சிறுவர்களைப் போல முதலில் இவன் நர்ஸரி வகுப்பில் சேரவில்லை. நேராக மூன்றாவது வகுப்பில் சேர்ந்தான். அந்த ஆண்டிலேயே 4, 5 வகுப்புப் பாடங்களைப் படித்து முடித்து அடுத்த ஆண்டில் 6வது வகுப்பில் சேர்ந்தான். 1995ல் டில்லியில் ஒரு பப்ளிக் ஸ்கூலில் ஏழாவது சேர்ந்து 1996-97 கல்வி ஆண்டில் எட்டாவது படித்தான். அப்போதே 9, 10 வகுப்புப் பாடங்களைப் படித்துவிட்டு பொதுப் பரீட்சை எழுத விண்ணப்பம் கொடுத்தான். ஆனால் பரீட்சை எழுத வயது போதாது என்று சி.பி.எஸ்.ஈ. போர்டு அனுமதி மறுக்கவே அவனது தந்தை நீதி மன்றத்தில் வழக்கு தொடுத்தார். நீதி மன்றமும் அனுமதி வழங்கும்படி சி.பி.எஸ்.ஈ.க்குக் கட்டளை இட்டது. உலகிலேயே ஒன்பதாவது வயதில் மெட்ரிக் பரீட்சையில் தேர்ச்சி பெற்றவர் என்ற சாதனையை இச் சிறுவன் புரிந்து கொண்டான்.



**உலக சாதனை**

மல்லாந்து படுத்து தன் மார்பின் மீது கார், ஜீப் முதலியவற்றை ஓட்டச் சொல்லி அற்புதச் செயல் புரியும் பயில்வான்களை சர்க்கஸ்களில் பார்த்திருக்கிறோம். மூன்று ஆண்டுகளுக்கு முன் பீகார் மாநிலத்தில் தன்பாதைச் சேர்ந்த பதினைந்து வயதுள்ள சுமிதா சிங் தன் மீது 1500கி. எடையுள்ள காரை செலுத்தச் சொல்லித் தாங்கிக் காட்டினாள். சென்ற ஏப்ரலில் 3200கி எடையுள்ள ட்ரக் தன் வயிற்றின் மீது ஏறிச் செல்வதை அவள் தாங்கினாளாம். இது ஒரு உலக சாதனை. அண்மையில் அவளது வயிற்றின் மீது 100கி எடையுள்ள கருங்கல்லை வைத்து அதை சம்மட்டி கொண்டு தூளாக்குவதை அவள் தாங்கிக் கொண்டு அரிய சாதனை புரிந்திருக்கிறாள்.

அம்புலிமாமா அனுபந்தம் 106



நம் நாட்டுக் கண்கவர் காட்சிகள்

# சிரவணபெளகோலா

கர்நாடக மாநிலத்தில் பெங்களூரிலிருந்து சற்றுத் தொலைவில் சிரவணபெளகோலா என்ற சிறிய ஊர் உள்ளது. இங்கு இந்திராத்திரி என்ற மலை மீது கோமடீஸ்வரரெனப் புகழ் பெற்ற மிகப் பெரிய பாஹுபலி சிலை உள்ளது. இது ஒரே கல்லால் உருவாக்கப்பட்டது. இதன் உயரம் 17 அடி.





இங்கு பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை 'மஹாமஸ்தக அபிஷேகம்' என்னும் பெருவிழா மிகப் பெரிய அளவில் நடைபெறுகிறது. இதில் நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் மக்கள் வந்து வழிபாட்டை நடத்துகிறார்கள். கோமடீஸ்வரருக்கு அபிஷேகம் செய்ய உயரமான மேடை அது சமயம் அமைக்கப்படுகிறது. அர்ச்சகர்கள் பெரிய கலயங்களில் பால், தயிர், தேன், இளநீர், மஞ்சள் நீர் ஆகியவற்றை நிரப்பி எடுத்து அபிஷேகம் செய்கிறார்கள். கோமடீஸ்வரருக்குச் செய்யும் இந்த அபிஷேக நீர்களில் தங்க, வெள்ளி நாணயங்கள் பக்தர்களால் போடப்படுகின்றன.

ராச மல்ல மன்னனின் சேனாதிபதியாக இருந்த சாமுண்டிராயன் கி.பி. 981ல் இந்த மாபெரும் விக்கிரகத்தை அமைத்தான். ஒரே கல்லில் உருவாக்கப்பட்ட மிக உயரமான இச் சிலை லட்சக் கணக்கானவர்களின் உள்ளங்களைக் கவர்ந்து வருகிறது.

# ஹரிதஸ்யர்

ஹரிதஸ்யர் என்ற மன்னர் இசை மேதை. மிக அருமையாகப் பாடக் கூடியவர். அவரது அவையில் பல பாடகர்களும் இசைக் கலைஞர்களும் இடம் பெற்றிருந்தார்கள். அவர்களை மன்னர் ஆதரித்து வந்தார். ஆனால் அவர்களில் யாருமே ஹரிதஸ்யருக்கு இணை யாக இருக்கவில்லை.

ஹரிதஸ்யர் நாரதரின் முன் பாடி அவரது பாராட்டுதல்களைப் பெற்றார். சரஸ்வதிதேவி முன்னும் பிரம்மாவின் முன்னும் இசையில் தன் திறமையைக் காட்டி அவர்களது ஆசி களைப் பெற்றார். அவரது புகழ் வைகுண்ட லோகத்திலும் பரவவே, மகா விஷ்ணு அவரை வரவழைத்து பாடச் சொன்னார். ஹரிதஸ்யரின் இனிய கானம் கேட்டு விஷ்ணு மெய் மறந்து தூங்கி விட்டார்.

ஹரிதஸ்யர் ஒருமுறை இசைக்கு அதிப



ரான பரமசிவனின் கானத்தைக் கேட்கும் வாய்ப்பு பெற்றார். சிவனார், சங்கராபரண ராகத்தை ஆலாபனை செய்ய ஹரிதஸ்யர் முழு கவனம் செலுத்தி அதைக் கேட்டார். அது பற்றி அவரது அபிப்பிராயம் கேட்டபோது ஹரிதஸ்யரும் ராகத்திற்கு ஏற்ப பாவம் குரலில் இருக்கவில்லை என்று கூறினார். சங்கரா பரணம் மனத்தை ஒரு நிலையில் இருத்திப் பாடப்பட வேண்டிய ராகம் என்றும், சிவனார் அதை ஆலாபனை செய்தபோது அவரது மனம் அமைதியுற்று இருக்கவில்லை என்றும் ஹரிதஸ்யர் கூறினார்.

அந்த ராகத்தை ஆலாபனை செய்தபோது சிவபிரான் ஹரிதஸ்யரின் இசைத் திறன் பற்றித் தம் மனதில் எடை போட்டுக் கொண்டிருந்தார். அதனால்தான் ராகத்தின் பாவம் சரியாக வெளிப்படவில்லை. ஆயினும் அந்த மாதிரி விமரிசனத்தை சிவபிரான் ரசிக்காமல் கோபமே அடைந்தார். அவர் தனது மூன்றா வது கண்ணைக் காட்டி ஹரிதஸ்யரை பயமுறுத் தினார். அதன் சக்தியை அறிந்திருந்த ஹரிதஸ யர் ''நீங்கள் உங்கள் மூன்றாவது கண்ணைத் திறந்து என்னை எதிர்த்தாலும் நான் கவலைப் படமாட்டேன். உங்கள் இசையில் காணப்பட்ட தவறு தவறுதான். நான் இறந்தாலும் அந்தத் தவறு அழிந்து விடாது'' என்றார்.

சிவனாரும் ''ஆகா! நான் உன்னைப் பரீட் சித்ததில் நீ தேறிவிட்டாய். நீ நல்ல பாடகன் மட்டுமல்ல. இசையை ரசித்து உன் விமர்சனத் தைத் துணிந்து கூறுபவன்'' என்று சொல்லி அவரைப் பாராட்டினார். அவர் ஹரிதஸ்யருக் குப் பல அரிய வரங்களை அளித்தார். அந்த வரத்தால் இந்திரன் முதலான தேவர்களைச் சிறைப்பிடித்த அந்தகாசுரன் என்ற மிக்க பலம் பொருந்திய அசுரனைக் கொன்று அவர்களை யெல்லாம் மீட்டார்.

## உங்களுக்கு தெரியுமா?

### ஜாஜ்

பத்தொன்பதாவது நூற்றாண்டில் கடைப் பகுதியில் அமெரிக்காவின் தென் பிராந்தியத்தில் தோன்றியது தான் ஜாஜ் இசை. ஒரு மெட்டில் ஆரம் பித்து இசைக் கலைஞர்கள். அதைத் தனிதனித்தனியாகப் பிரித்துப் பாடி




முடிவில் ஆரம்பத்தில் பாடிய மெட்டிற்குப் போவதுதான் ஜாஜ் இசையின் சிறப்பு. இது எப்படி ஆரம்பமாகியது என்று சொல்ல முடியாது. 1920ம் ஆண்டை இந்த இசையின் பொற்காலம் என்று கூறலாம். அமெரிக்கா வில் சிறுவர் முதல் பெரியோர் வரை இசைப்பதாய் ஜாஜ் பிரபலமாகிவிட்டது. இதன் வளர்ச்சிக்குக் காரணமான இசைக் கலைஞர்கள். லூயி ஆர்ம் ஸ்ட்ராங், பென்னி குட்மென், டிஜ்ஜி கிலோபி, க்ளென்மில்லா முதலியவர்களாவர்.

## வானவில்




### முதலாவது விண்வெளிப் பயணி

முதன் முதலாக விண்வெளியில் பயணம் செய்தது யார் தெரியுமா? லைகா என்ற நாய் என்றால் நீங்கள் ஆச்சரியப்படத்தான் செய்வீர்கள். ஆம். இது உண்மையே. 1957 நவம்பர் 3ந் தேதி ரஷ்யர் விண்வெளிக்கு அனுப்பினார்கள். அது வைக்கப் பட்ட அறை ஏர்கண்டிஷன் செய்யப்பட்டது. அதற்குத் தேவைப்படும் உணவும் அதில் வைக்கப்பட்டது. விண்வெளி யில் நாய் நடந்து கொள்ளும் விதத்தை ஸ்புட்னிக்கில் அமைக்கப்பட்ட சாதனங் கள் பூமியிலிருந்த விஞ்ஞானிகளுக் குத் தெரியப்படுத்தின. அந் நாட்களில் விண் வெளியில் செலுத்தப்பட்ட கப்பலை பூமிக்குத் திரும்பக் கொண்டு வரும் முறை கண்டுபிடிக்கப்பட்டிருக்கவில்லை. அதனால் லைகா அந்த விண்வெளிக் கப்பலுள்ளேயே இறந்து விட்டது.

## சுதந்திரத்தின் பொன்விழா ஆண்டில் அம்புலிமாமாவின் காணிக்கை

# முதலாவது சுதந்திரப் போர்

இங்கிலாந்து கி.பி. 1600ல் வரலாற்றின் உச்ச நிலையில் இருந்தது. மிகச் சிறிய நாடாயினும மிகப் பெரும் கனவுகளைக் காணத் தொடங்கியது. அப்போது அங்கு முதலாவது எலிச பெத் ராணியின் ஆட்சி இருந்தது. புகழ் பெற்ற நாடகாசிரியர் வில்லியம் ஷேக்ஸ்பியர் தம் நாடகங்களைப் படைத்து அளித்தார். கடற் பயணி சர் வால்டர் ராலே உருளைக்கிழங்கையும் புகையிலையையும் அப்போதுதான் அமெரிக்காவிலிருந்து தம் நாட்டிற்குக் கொண்டு வந் தார். சர் பிரான்சிஸ் பேகன் புதிய வசன நடையில் கட்டுரைகளை எழுதினார். இன்னும் பல பிரமுகர்கள் தத்தம் துறைகளில் புதுப்புது முயற்சிகளை மேற்கொண்டார்கள்.

அந்த நூற்றாண்டின் கடைசியில் எலிஸபெத் ராணி. கிழக்கிந்தியக் கம்பெனி என்னும் ஒரு கூட்டமைப்பிற்கு தூரக்கிழக்கு நாடுகளில் தம் பொருள்களை விற்க அனுமதிக்கும் பத்திரத் தில் கையொப்பமிட்டார். அந்தக் கம்பெனியின் பிரதிநிதி சர் தாமஸ் ரோ நம் நாட்டிற்கு வந்து முகலாய சக்கரவர்த்தி ஜஹாங்கீரின் தர்பாரில் மூன்று ஆண்டுகள் இருந்து அவரது அன்பைப் பெற்று இந்தியாவில் வியாபாரம் செய்ய அனுமதியைப் பெற்றுக் கொண்டார். அதன் பலனாக முதலில் குஜராத்திலுள்ள சூரத்தில் முதல் பண்டகசாலை திறக்கப்பட்டு பிறகு நாட்டின் பல இடங்களில் வியாபாரத்தைக் கம்பெனி செய்யலாயிற்று.

மெதுவாக கம்பெனிக்கு விபரீத ஆசைகள் தலை தூக்கலாயின. தாங்கள் வியாபாரம் செய்ய மட்டுமே வந்தவர்கள் என்பதை எண்ணாமல் முகலாய சக்கரவர்த்தி பலமற்றவராகி விட்டது கண்டு சிற்றரசர்களை அவருக்கு எதிராக முடுக்கி விட்டார்கள். அவர்கள் சுயநலம் கொண்டார்கள். இச்சமயம் கம்பெனிக்கென ராணுவத்தை அமைத்துக் கொண்டார்கள். இந்த ராணுவம் ஒரு சிற்றரசனின் உதவிக்குப் போய் மற்ற சிற்றரசனைத் தலை தூக்கவிடாமல் செய்தது. உதவி புரிந்து விட்டு கம்பெனி அந்தச் சிற்றரசனிடமிருந்து அவனது நாட்டின் ஒரு பகுதியைப் பெற்றுக் கொண்டது.

நூற்றைம்பது ஆண்டுகளுக்குள் கம்பெனி இங்கிருந்த சிற்றரசர்களை விட பலம் பொருந் தியதாக ஆகிவிட்டது. என்னென்னவோ காரணங்களைக் கூறி நயத்தாலும் பயத்தாலும் அவர்களது நாடுகளைத் தன் வசப்படுத்திக் கொண்டது. இவ்வாறு பிரிட்டிஷ் இந்திய சாம் ராஜ்யம் உருவாகியது. கைகட்டிக் கெஞ்சித் தலை குனிந்து இந்நாட்டில் வியாபாரம் செய்ய அனுமதி கேட்டவர்கள் சிறிது காலத்துள் அதே மன்னர்களின் நாடுகளை அபகரித்துக் கொண்டார்கள். வியாபாரிகள் ஆட்சி புரிபவர்களாக மாறிவிட்டார்கள்!

இவர்கள் இந்தியாவிற்கு வந்து இரு நூற்றைம்பது ஆண்டுகளான போது இந்திய மக்கள் அவர்களை வெறுக்கலானார்கள். இந்த வெறுப்பு புரட்சி செய்யும் அளவிலும் போய்விட்டது. அதில் ராணுவப் படை வீரர்கள் அதிகமாய் கலந்து கொண்டதால் பிரிட்டிஷார் கூறியது போல இப்புரட்சி சிப்பாய்கள் புரிந்த கலகம் மட்டுமே அல்ல. பிரிட்டிஷ் ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வரவேண்டுமென எண்ணிய இந்திய மக்களின் புரட்சி அது. இதை முதலாவது சுதந்திரப் போர் எனக் கூறுவதே முற்றிலும் பொருத்தமாகும்.

**மா**லைக் கதிரவனின் மஞ்சள் கிரணங்கள் பாகீரதி நதியின் மீது பட்டு அதை பொன்போல மிளிரச் செய்தன. நதிக்கரையில் பதினெட்டு வயது வாலிபன் ஒருவன் ஏழு வயதான ஒரு சிறுமிக்கு வாட் போர் புரியப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்தான். நதியின் அலை ஓசையுடன் போட்டி போடுவது போல வாட்கள் மோதி ஒலித்தன.

நூற்றுக் கணக்கானவர்கள் இந்த வாட்போர் பயிற்சியைக் கண்டு வியந்து கொண்டிருந்தனர். அந்த இளைஞன் மின்னல் வேகத்தில் வாளைச்சுழற்றியதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. ஆனால் அந்தச்சின்னஞ் சிறு பெண் பாய்ந்து பாய்ந்து மிகவும் லாகவமாக வாளைச்சுழற்றியதுதான் எல்லோரையும் வியக்க வைத்தது.

பிட்டூருக்கு விருந்தாளியாக வந்து அந்த வாட் பயிற்சியைக் கண்ட ஜான்ஸியின் ராஜ புரோகிதர் "இளவரசருடன் போர் புரியும் அச் சிறுமி யார்?" என்று பேஷ்வாபாஜீராவின் அமைச்சரிடம் கேட்டார். அமைச்சரும் "மோரோபந்தின் அருமைப் புதல்வி மனுபாய் அவள். இளவரசர் அவளைத் தன் தங்கை போலக் கருதி அரச குடும்பத்திற்குரிய போர்க்கலைகளை அவளுக்குக் கற்றுக் கொடுக்கிறார். அவள் வயதில் சிறியவளாக இருந்தாலும் பெரிய அனுபவசாலிபோல் பேசுகிறாள். மகாராணி போல நடக்கிறாள்" என்றார்.

புரோகிதரும் "அவள் மகாராணியாவதற்கு எல்லாத் தகுதிகளும் பெற்றிருக்கிறாள்" என்றார். முகலாய சாம்ராஜ்யத்தின் அஸ்திவாரத்தையே ஆட்டி கதி கலங்க வைத்த சத்ரபதி சிவாஜியின் அரச சபையில் பேஷ்வா என்ற பெயரில் முதலமைச்சராக இருந்தவர்களின் வம்சத்தில் வந்தவர்தாம் இரண்டாவது பாஜிராவ். சிவாஜிக்குப் பிறகு பேஷ்வாக்களே ஆட்சி





புரிந்து வந்தார்கள். அவருடைய வம்சத்தவரில் ஒருவர்தான் அப்போது ஆட்சி புரிந்து கொண்டிருந்தார். ஆனால் என்னென்னவோ காரணங்களைக் கூறி கம்பெனி அவரது அதிகாரங்களை எல்லாம் தன் வசப்படுத்திக் கொண்டுவிட்டது. அதன் பிறகும் கம்பெனி தன் கை வரிசையைக்காட்டியது. அவர் தம் நாட்டைக் கம்பெனிக்கு ஒப்படைத்து விட வேண்டும் என்றும் அதற்கு பதிலாக ஆண்டு தோறும் ஒரு பெருந் தொகையை ராஜ மானியமாகக் கொடுப்பதாகக் கூறி அவரை அதற்குச்சம்மதிக்கவும் வைத்தது. முடிவில் இரண்டாவது பாஜி ராவ் நாடிழந்து, தன் அதிகாரங்களை எல்லாம் இழந்து அவர்கள் கொடுக்கும் ராஜ மான்யத்தில் காலம் கழித்து வரும் நிலைக்கு வந்து விட்டார்.

பேஷ்வாவிற்கு குழந்தை எதுவும் பிறக்கவில்லை. அவர்தன்னிடம் பணி புரிந்தவரின் மகனான மாதவராவின் மீது பாசம் கொண்டு அவனது கூரிய அறிவையும் திறமையையும் கண்டு அவனை தம் புதல்வனாக சுவீகாரம் எடுத்துக் கொண்டார். 1827ல் மாதவராவ் பேஷ்வாவின் வாரிசு மகனானான். அவன் பெரியவனாகி நானா சாஹிப் என்ற பெயர் பெற்றான். அவனிடம் போர்க் கலைகளைப் பயின்ற சிறுமிதான் பிற்காலத்தில் புகழ் பெற்ற வீராங்கனையாக விளங்கிய ஜான்ஸி ராணி லக்ஷ்மி பாய்.

புரோகிதர் ஜான்ஸிக்குத் திரும்பிப் போய் அச்சிறுமியைப் பற்றி மன்னரிடம் கூறவே அவரும் தம் அமைச்சர்களை பிட்டூருக்கு அனுப்பி மனு பாயை தமக்குப் பெண் கேட்க சொன்னார். மனுபாயியின் விவாகம் ஜான்ஸி மன்னர் கங்காதரராவுடன் நடைபெற்றது. ராணி லஷ்மி பாயாகிய அவள் தன் கணவருடன் வெகு நாட்கள் வாழக் கொடுத்து வைக்கவில்லை. அவள் தன் பதினெட்டாவது வயதில் தன் கணவரை இழந்தாள்.

நானா சாஹப்பின் தந்தையும் 1885ல் இறந்தார். அதன் பின் ராஜ மானியத் தொகையை நானா சாஹப் பிற்குக் கொடுக்கக் கம்பெனி மறுத்தது. காரணம் அவர் பேஷ்வாவின் சொந்த மகனல்ல என்பது. ஒப்பந்தப்படி கம்பெனி பேஷ்வாவுக்கும் அவரது சந்நிதியாருக்கும் ராஜ மானியம் கொடுக்க வேண்டும். அந்த நிபந்தனையின் பேரில்தான் பேஷ்வா தம் நாட்டைக் கம்பெனிக்கு அளித்தார். கம்பெனிதான் கொடுத்த வாக்கை மீறு

கிறது என நானா சாஹப் கடிதம் எழுதி ''நீங்கள் நிபந்தனைப்படி ராஜ மானியம் கொடுக்காவிட்டால் என் நாட்டை என்னிடம் கொடுத்து விடுங்கள்'' எனக் குறிப்பிட்டார்.

இதற்கு கம்பெனி பதில் எதுவும் அளிக்கவில்லை. பேஷ்வா நாட்டை கம்பெனிக்குக் கொடுத்துவிட்டதால் தமக்கென ஒரு படையை வைத்துக் கொள்ளவில்லை. அதனால் நானா சாஹப் கம்பெனியின் படைகளை எதிர்க்க முடியாத நிலையில் இருந்தார். அதனால் லண்டனிலுள்ள உயர் அதிகாரிகளிடம் அஜீமுல்லா என்பவரை இங்கிலாந்திற்கு அனுப்பினார். அவர் ஆங்கலம், பிரெஞ்சு ஆகிய இரு மொழிகளை அறிந்தவர். அதனால் பல அதிகாரிகளிடம் நானா சாஹப்பின் விஷயத்தைக் கூறி கிழக்கிந்தியக் கம்பெனி செய்யும் அநியாயத்தைக் தடுத்து நிறுத்துமாறு முறையிட்டார். ஆனால் அந்த முயற்சி வெற்றி பெறவில்லை.

மகாராஜா கங்காதரராவ் இறக்கு முன் ராணி லக்ஷ்மி பாய் ஒரு குழந்தையை சுவீகாரம் எடுத்துக் கொள்ளலாம் என்ற அதிகாரத்தை அளித்தார். அதன்படி ராணி லக்ஷ்மி பாய் ஒரு குழந்தையை சுவீகாரம் எடுத்துக் கொண்டாள். அரசாங்க நிர்வாகத்தை மேற்கொண்டு அவள் எதையும் மிகவும் துணிச்சலுடன் செய்து வந்தாள். அவளது தைரியத்தையும் துணிச்சலையும் கண்ட அரசாங்க அதிகாரிகளும் மற்றவர்களும் பிரமித்தனர். ஒரு சாதாரண குடும்பத்தில் பிறந்த பெண் ராணியாகி திறம்பட ஆட்சி புரிந்து வந்தது எல்லோரையும் வியக்க வைத்தது.



கங்காதரராவ் இறந்ததும் அவரது உறவினர்கள் நாட்டை ஆளத் தாமே உரிமை பெற்றவர்கள் எனக் கூறிக் கொண்டு வந்தனர். ஆனால் லக்ஷ்மி பாய் அவர்களது முயற்சிகளை எல்லாம் தோல்வியுறச் செய்தாள். அவர்களை எல்லாம் தன் முழு சக்தி கொண்டு அடக்கியும் விட்டாள்.

ஒருநாள் முதலமைச்சர் மிகுந்த கவலையுடன் ராணி லக்ஷ்மிபாயின் முன் வந்து ''மகா ராணியாரே! மிகவும் வருத்தத்தை அளிக்கும் ஒரு விஷயத்தை கூற வேண்டியுள்ளது'' என்றார்.

லக்ஷ்மிபாயும் ''என் கணவர் இறந்த துக்கத்தையே நான் தாங்கிக் கொண்டிருக்கிறேன். இதைவிட வருத்தத்தைத் தர கூடிய செய்தி வேறு எதுவும் இருக்க முடியாது. எனவே தாராள

மாக நீங்கள் விஷயத்தைக் கூறலாம்'' என்றார்.

அமைச்சரும் ''அரசியே! தாங்கள் சுவீகாரம் எடுத்துக் கொண்ட மகனுக்கு இந்த நாட்டின் ஆட்சிக்கு வர எவ்வித உரிமையும் இல்லை என்று கம்பெனி கூறுகிறது'' என்றார். மகாராணி ''ஒரு நாடு இன்னாருடையது என்றோ அல்லது இன்னாருடையது அல்ல என்று கூறுவதற்கு இவர்கள் யார்? இது மன்னரின் இஷ்டத்தைப் பொறுத்தது. மன்னர் இல்லாத போது அவரது மனைவியான மகாராணிதான் அது பற்றித் தீர்மானிக்க வேண்டும். அவர் இறக்குமுன் ஒரு குழந்தையை சுவீகாரம் எடுத்துக் கொள்ளும்படி என்னிடம் கூறினார். அதன்படி நான் சுவீகாரம் எடுத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றாள்.

அமைச்சரும் ''நீங்கள் சுவீகாரம் எடுத்துக் கொண்டதை கம்பெனியார் அங்கீகரிக்க மாட்டார்களாம்'' என்றார். அது கேட்டு ராணி லக்ஷ்மிபாய் ''இவர்கள் யார் அங்கீகரிப்பதற்கு? சுவீகார மகனுக்கு சொந்த மகனுக்கு உள்ள உரிமைகளெல்லாம் உண்டு. இது நம் நாட்டில் தொன்று தொட்டு இருந்து வரும் வழக்கமாகும். சீதா தேவியை ஜனக மன்னரின் புதல்வி அல்ல என்று யாராவது கூறுகிறார்களா? இதெல்லாம் தெரியாதா முட்டாள்களா இந்த கம்பெனியார்?'' என்று பொரிந்து தள்ளினாள்.

அமைச்சரும் ''அவர்கள் முட்டாள்களல்ல. காரியவாதிகள். நம் ஜான்ஸியை மட்டுமல்ல, இந்தியா முழுவதையுமே கைப்பற்றித் தம் ஆட்சியை நிலை நிறுத்தப் பார்க்கிறார்கள்'' என்றார்.

லக்ஷ்மிபாயோ ''இது நடக்காது, நம் தாய் நாடான ஜான்ஸியை இந்தக் கொள்ளைக்காரர்களிடம் கொடுக்கவே மாட்டோம். அவர்கள் செய்வதை செய்யட்டும். நாம் நம் சுதந்திரத்திற்காகவும், மானம், மரியாதை கௌரவம் ஆகியவற்றைக் காத்துக் கொள்வதற்காகவும் போராடியே ஆக வேண்டும்'' என்றாள்.

ராணி லக்ஷ்மி பாய் கூறிய வீராவேசச் சொற்களைக் கேட்ட முதலமைச்சரும் அங்கிருந்த மற்றவர்களும் புத்துணர்வு பெற்றவர்களாய் அந்த வீராங்கனைக்கு வணக்கம் செலுத்தினார்கள்.

**(தொடரும்)**





# முள்ளை முள்ளால் எடு!

சிங்களத் தீவின் சின்னய்யா என்ற கப்பல் வியாபாரி இறக்கு முன் தன் மகனிடம் ''பொன்னய்யா! நீ கடல் வழியே வியாபாரத்திற்குப் போகும் போது புளுகுத் தீவு என்ற தீவிற்கு மட்டும் போய் விடாதே. ஏனென்றால் அங்குள்ளவர்கள் அண்டப் புளுகுபுளுகி உன்னை ஏமாற்றி உன்னிடம் உள்ளதை எல்லாம் பறித்துக் கொள்வார்கள்'' என்று எச்சரித்தான். பொன்னய்யன் கெட்டிக்காரன் அதனால் அவன் புளுகுத் தீவிற்குப் போய் அங்குள்ளவர்கள் எப்படித்தான் ஏமாற்றுவார்கள் என்று பார்க்க விரும்பினான்.

அதனால் அவன் நான்கு கப்பல்களில் சரக்குகளை ஏற்றிக் கொண்டு புளுகுத் தீவை அடைந்தான். அவன் தன் கப்பல்களைக் கரையோரம் நிறுத்தி விட்டுக் கையில் வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு கரையில் இறங்கி நடக்கலானான். அப்போது ஒரு கொக்கு கடலில் மீன்களைப் பிடித்துக் கொண்டிருப்பதை அவன் கண்டு அதன் மீது ஒரு அம்பை எய்தான். அந்தக் கொக்கு அம்பினால் அடிபட்டுக் கடலில் விழுந்து இறந்தது.

அப்போது இதைப் பார்த்துக் கொண்டிருந்த மீனவன் ஓடி வந்து பொன்னய்யனைப் பிடித்துக் கொண்டு ''நீ யார்? ஏன் என் தந்தையைக் கொன்றாய்? உன் மீது வழக்குத் தொடரப் போகிறேன்'' என்றான். பொன்னய்யனும் ''அந்தக் கொக்கா உன் தந்தை?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

மீனவனும் ''ஆம். முன் பிறப்பில் இருந்த என் தந்தைதான் இப் பிறப்பில் கொக்காக பிறந்தார். அவர் மீன்களைப் பிடிக்க உதவிக் கொண்டிருந்தார். அப்போதுதான் நீ அவரைக் கொன்றாய்'' என்றான். பொன்னய்யன் அவனிடமிருந்து தன்னை விடு

—சங்கர சுவாமிநாதன்—

வித்துக்கொண்டு ''இந்தக் கதையெல்லாம் வேண்டாம். நீ யாரிடம் போய் வேண்டுமானாலும் புகார் செய்து கொள். கவலை இல்லை'' என்று கூறிவிட்டு ஊருக்குள் சென்றான்.

அப்போது ஒருவன் அவனருகே வந்து ''ஓ! வந்து விட்டாயா? வெகு நாட்களுக்கு முன் என் வலது காதை உன் தந்தையிடம் அடகு வைத்திருந்தேன். அந்தப் பணத்தைக் கொடுக்கிறேன். என் காதைத் திருப்பிக் கொடு'' என்று கேட்டான். அதைக் கேட்டு பொன்னய்யன் திகைத்தான். அந்த மனிதனுக்கு இடது காது மட்டும் இருப்பதையும் அவன் கவனித்தான். அவன் அந்த மனிதனிடம் ''இதெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது'' என்றான்.

அந்த மனிதனோ ''உன் மீது புகார் செய்து என் காதை வாங்கிக் கொள்கிறேன் அல்லது அதற்கு நஷ்ட ஈடாக எதையாவது வசூல் செய்து கொள்கிறேன்'' என்று கூறவே பொன்னய்யனும் ''நீ என்ன வேண்டுமானாலும் செய்து கொள். நானொன்றும் கவலைப்பட மாட்டேன்'' என்று அலட்சியமாகக் கூறிவிட்டுச் சென்றான்.

அப்போது நாற்பது வயதான ஒரு பெண் பொன்னய்யனைப் பார்த்து ''இருபது வருடங்களுக்கு முன் இந்தத் தீவிற்கு வந்த உன் தந்தை என்னை மணந்து கொண்டார். அதன் பிறகு இங்கிருந்து போனவர் என்னை தம் ஊருக்கு அழைத்துக் கொண்டு போக வரவே இல்லை. எனக்கு பத்தாயிரம் வராகன்கள் கொடுப்பதாகவும் வாக்களித்து விட்டுப் போனார். அதை இப்போது நீ கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் உன் மீது நான் புகார் செய்வேன்'' என்றாள் பொன்னய்யனோ ''நீ யாரோ? உனக்கு நான் செல்லாக் காசு கூட கொடுக்க மாட்டேன். உன்னால் முடிந்ததை செய்து கொள்'' என கூறிவிட்டு அங்கிருந்து சென்றான்.



அப்போது ஒரு நாவிதன் அவன் முன் வந்து ''உங்களுக்கு க்ஷவரம் செய்து விடுகிறேன்'' எனவே பொன்னய்யனும் ''அதற்கு எவ்வளவு காசு கேட்கிறாய்?'' என்று கேட்டான். நாவிதனும் ''நீங்கள் எனக்கு சந்தோஷம் வரும்படி எதைக் கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறேன்'' என்றான். பொன்னய்யனும் அவனிடம் முகச் சவரம் செய்து கொண்டு ஒரு வெள்ளி நாணயத்தைக் கொடுத்தான். அதை வாங்க நாவிதன் வாங்க மறுத்தான். பொன்னய்யன் பத்து ரூபாய்க் கொடுத்ததும் அவன் வாங்கிக் கொள்ளாமல் போகவே, அவன் ''உனக்கு எதுவும் கொடுக்க முடியாது போ'' என்றான்.

நாவிதனோ ''நான் சந்தோஷப் படும்படி நீ எதுவும் கொடுக்காததால் நான் புகார் கொடுத்து எனக்கு வேண்டியதை உன்னிடமிருந்து வசூலித்துக் கொள்கிறேன்'' எனவே பொன்னய்யனும் ''போ... போ. நீ என்ன வேண்டுமானாலும் செய்து கொள்'' என்று கூறி விட்டுப் போனான்.

மீனவனும், ஒரு காதுப் பேர் வழியும், மோசக்கார ஸ்திரீயும் நாவிதனும் அத் தீவின் மன்னனிடம் பொன்னய்யன் மீது புகார் தொடுத்தார்கள். மன்னனும் தன் வீரர்களை அனுப்பி பொன்னய்யனை அழைத்து வரச் சொன்னான். அவன் வந்ததும் விசாரணை ஆரம்பமாகியது.

மீனவன் தன் தந்தை இப் பிறப்பில் கொக்காய் இருந்து தனக்கு மீன்களைப் பிடித்துக் கொடுக்கையில் பொன்னய்யன் அம்பை எய்து கொக்காக இருந்த தன் தந்தையைக் கொன்று விட்டதாகக் குற்றம் சாட்டினான்.



மன்னனும் அதற்கு நஷ்ட ஈடாக பொன்னயய்ன் தனது கப்பல்களில் ஒன்றை மீனவனுக்குக் கொடுக்க வேண்டுமெனக் கூறினான்.

அடுத்து ஒரு காதுப் பேர்வழி தன் ஒரு காதை பொன்னய்யனின் தந்தையிடம் அடகு வைத்ததைக் கூறி இப்போது காதை பொன்னய்யன் கொடுக்காததால் தனக்கு அவன் நஷ்ட ஈடு கொடுக்க வேண்டுமெனக் கோரினான். மன்னனும் ஒரு காதுப் பேர் வழிக்கு ஒரு கப்பலைக் கூறினான். இது போல மோசக்காரி வழக்கிலும் அவளுக்குப் பொன்னய்யன் ஒரு கப்பலைக் கொடுக்கக் கூறினான். நாவிதனும் தன் வழக்கைக் கூறி பொன்னய்யனால் தன்னை சந்தோஷப்படுத்த முடியாது போனதால் நஷ்ட ஈடு கோரவே மன்னன் அவனுக்கும் பொன்னய்யன்



ஒருகப்பல் கொடுக்க வேண்டுமெனக் கூறினான்.

பொன்னய்யன் திகைத்தாலும் சட்டெனச் சமாளித்துக் கொண்டான். பிறகு அவன் சட்டெனத் தன் கழுத்தி லிருந்த முத்துமாலையைக் கழற்றி மன்னனருகே நின்ற இளம் அரச குமாரனின் கழுத்தில் போட்டான் எல்லோரும் சந்தோஷப்பட்டனர். அப்போது பொன்னய்யன் நாவிதனி டம் ''நீயும் சந்தோஷப்படுகிறாய் தானே'' எனக் கேட்கவே அவனும் ஆமாம் என்று கூறினான்.

அப்போது பொன்னய்யன் மன்ன னிடம் ''நான் இவனை சந்தோஷப் படுத்திவிட்டேன். அதனால் இவனுக் குக் கப்பலைக் கொடுக்க வேண்டிய தில்லை'' எனவே மன்னனும் ''ஆமாம் இவன் சந்தோஷப்பட்டு விட்டான். அதனால் இவனுக்கு நீ கப்பலைக் கொடுக்க வேண்டிய தில்லை'' என்று தீர்ப்புக் கூறினான்.

அடுத்து மோசக்காரியிடம் பொன் னய்யன் ''என் தந்தை இறந்து போய் இரண்டு வருடங்களாகின்றன. எங் கள் நாட்டு வழக்கப்படி கணவன் இறந்தால் மனைவியும் எரிந்து சாம் பலாக வேண்டும். அதனால் நீ எரிந்து சாம்பலாகி விட்டால் உன் வாரிசு களுக்குப் பணமோ கப்பலோ கிடைக் கும். என்ன செய்யப் போகிறாய்?'' என்று கேட்டான். அவள் வழக்கை தொடர விரும்பவில்லை என்று கூறவே பொன்னய்யனும தான் அவளுக்குப் பணமோ கப்பலோ கொடுக்க வேண்டியதில்லை என் றான். மன்னன் அது சரியெனக் கூறி அவளுக்குப பொன்னய்யன் கப்பல் கொடுக்க வேண்டியதில்லை என்று தீர்ப்பளித்தான்.

அடுத்து ஒரு காதுப் பேர்வழி யிடம், பொன்னய்யன் ''என் தந்தை காதுகளை வாங்கிக் கொண்டு பணம் கொடுத்தது உண்மையே. என் தந்தை யின் பெட்டகத்தில் பல காதுகள் உள்ளன. அதனால் உன் இடது காதை அறுத்து கொடுத்தால் அதைக் கொண்டு சரி பார்த்து உன் வலது காதைக் கொண்டு வந்து கொடுக் கிறேன்'' என்றான். ஒரு காதுப் பேர் வழி பயந்து தான் வழக்கைத் திரும் பப் பெறுவதாகக் கூறினான். அப் போது தான் அவனுக்கும் கப்பலைக் கொடுக்க வேண்டியதில்லை எனப் பொன்னய்யன் கூறினான். மன்ன னும் அதை ஏற்று ஒரு காதுப் பேர் வழிக்குக் கப்பல் கொடுக்க வேண்டிய

தில்லை என்று தீர்ப்பளித்தான்.

அடுத்து மீனவன் வழக்கில் பொன்னய்யன் "இவனது தந்தையான கொக்கு இந்தப் பிறப்பில் மீனாக இருந்த என் தந்தையைக் குத்திக் கொன்றது. அதனால்தான் என் தந்தையைக் காப்பாற்றுவதற்காக அந்தக் கொக்கை அம்பால் அடித்தேன். என் தந்தை மீன் வடிவில் இருப்பது தெரிந்துதான் இந்தத் தீவிற்கு வந்தேன். என் தந்தை மீனாக இங்கு இல்லாமல் இருந்திருந்தால் நான் இங்கு வந்தே இருக்க மாட்டேன். என் தந்தையை உயிர்ப்பித்துக் கொடுத்தால் நான் கொக்கைக் கொன்றதற்காக ஒரு கப்பலைக் கொடுக்கிறேன். அப்படிச் செய்யா விட்டால் கப்பலைக் கொடுக்க மாட்டேன்'' என்றான்.

மீனவனும் தன்னால் இறந்த மீனை உயிர்ப்பிக்க முடியாது எனக் கூறவே. மன்னனும் அவனுக்கு பொன்னய்யன் கப்பல் கொடுக்க வேண்டியதில்லை என்று தீர்ப்பளித்தான்.

இவ்வாறு பொன்னய்யன் நால்வர் சாட்டிய குற்றச்சாட்டுகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டதோடு தன் கப்பல்களை அவர்களுக்கு கொடுக்காமலிருக்கவும் வழி செய்து கொண்டான். முதலில் நாவிதன் வாயாலேயே அவன் திருப்தி அடைந்து விட்டதாகக் கூறத் தன் முத்து மாலையை எடுத்து அரசகுமாரனின் கழுத்தில் போட்டான்.

அடுத்து ஒரு காதுப் பேர்வழியை அவன் கூறிய கதையைக் கொண்டே அவனைப் பயமுறுத்தி வழக்கை ஒன்றுமில்லாமல் செய்தான். தன் தகப்பனை மணந்ததாகக் கூறிய பெண்ணையும் அவள் கூறிய கதையைக் கொண்டே மடக்கினான். மீனவனின் கதைப்படியே பொன்னய்யன் வேறொரு வாதத்தைக் கூறி அவனது வழக்கையும் ஒன்றுமில்லாமல் செய்து விட்டான். இவ்வாறு முள்ளை முள்ளைக் கொண்டே எடுத்தது போலாயிற்று.

இதன் பின் மன்னன் பொன்னய்யனின் கூரிய அறிவைப் பாராட்டி அவன் தன்னுடன் சில நாட்கள் தங்கி இருக்க வேண்டினான். பொன்னய்யனும் அவ்வாறே சில நாட்கள் இருந்து விட்டுக் கிளம்பினான். அப்போது மன்னன் அவனுக்குப் பல பரிசுகளைக் கொடுத்து அனுப்பினான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 நவம்பர் மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. SESHAGIRI



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ செப்டம்பர் 25–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

## ஜூலை மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **இளந்தளிருக்கு முன்னேற்றம் தேவை.**

இரண்டாவது போட்டோ : **பசுந்தளிருக்கு நீர்வளம் தேவை.**

பரிசு பெற்றவர் : **திருமதி லட்சுமி பாஸ்கர், செம்பட்டு, திருச்சி–21.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., Chandamama Buildings, Chennai - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, 188, N.S.K. Salai, Vadapalani, Chennai - 600 026 (India) Editor : NAGI REDDI.